# தனித்தன்மை வாய்ந்த
# இவரது தணியாத விருப்பம்
# 'ப்ளெயின்' ஷர்ட்டிங் மட்டும் அணிவதே

**அதாவது மஃபத்லால் வழங்கும்
பாலியெஸ்டர் மற்றும் பாலியெஸ்டர்
ப்ளெண்டுகளின் ஷர்ட்டிங்.**

அவருக்கென ஒரு தனி பாணி, தனி ரசனை.
பறைசாற்றமாட்டார், என்றும் பவ்வியமாக இருப்பார்.
தனக்கே உரிய தனித் தோற்றத்தை வெளியுறுத்துவார்.

**மஃபத்லால்
ஷர்ட்டிங்**



MF-124-TAM

# கலைஞர் விடுதலை!



கலைஞர் கோர்ட்டுக்கு வருவதை முன்னிட்டு எழும்பூர் பெருநகர் மாஜிஸ்டிரேட் கட்டிடத்தைச் சுற்றிப் பலத்த போலீஸ் காவல். (முதல் நாள் பந்தோபஸ்து ஏற்பாடுகளைப் பற்றி கமிஷனர் அலுவலகத்தில் இரண்டு மணி நேரம் ஆலோசனை நடந்தது) காலை எட்டு மணியிலிருந்தே தி. மு. க.வினர் கோர்ட்டுக்குள் கூடத் தொடங்கி விட்டனர். 9 மணிக்குள் கிட்டத்தட்ட 1000 பேர் நீதிமன்றக் காம்பவுண்டுக்குள் கூடிவிட்டனர். கலைஞரை வாழ்த்தியும், எம். ஜி. ஆரைத்தாக்கியும் அவர்கள் எழுப்பிய கோஷங்கள் காதைப் பிளந்தன. 9 மணிக்கு மேல் யாரும் கோர்ட்டுக்குள் அனுமதிக்கப் படவில்லை. அரை பர்லாங் தூரத்திலேயே தி. மு. க. வினர் நிறுத்தி வைக்கப்பட்டனர். அவர்களைக் கட்டுப்படுத்த குதிரைப்படை போலீஸ் ஈடுபடவேண்டியிருந்தது. கூடியிருந்தவர்களில் கிட்டத்தட்ட 500 பெண்கள்!

சரியாக 11.20க்கு கலைஞரும், அவருடன் கைதான 116 பேர்களும் கோர்ட்டுக்குக் கொண்டுவரப்பட்டார்கள். போலீஸ் வானிலிருந்து கீழே இறங்கிய கலைஞர் வழக்கமான புன்சிரிப்புடன் தமது உடன்பிறப்புகளுக்குக் கையை ஆட்டி வணக்கத்தைத் தெரிவித்தார். முகத்தில் எந்த விதமான களைப்பும் தெரியவில்லை. மிகவும் உற்சாகமாக இருந்தார். கோர்ட்டுக்குள் இருந்த கட்சித் தலைவர்களிடம் இரண்டு நிமிடம் பேசினார். 11.24க்குப் பெருநகர் இரண்டாவது மாஜிஸ்டிரேட் ரங்கசாமி முன்னிலையில் ஆஜர் செய்யப்பட்டார். அரசாங்க தரப்பு வக்கில் எழுந்து குற்றப் பத்திரிகையின் நகல்களைக் கொடுக்க இன்னும் ஒரு நாள் அவகாசம் வேண்டுமென்றும் அதுவரை காவலை நீடிக்குமாறும் கேட்டுக் கொண்டார். மாஜிஸ்டிரேட், கலைஞரிடம், ''நீங்கள் ஜாமீனில் செல்ல விரும்புகிறீர்களா?'' என்று கேட்டதற்கு ''விருப்பமில்லை'' என்று கூறிய கருணாநிதி மாஜிஸ்டிரேட்டின் அனுமதியைப் பெற்றுச் சுருக்கமான ஒரு அறிக்கையைப் படித்தார். அந்த அறிக்கையில் அவர் 'நான் குற்றவாளியல்ல' என்று முடித்திருந்தார். மாஜிஸ்திரேட் வழக்கை அக்டோபர் 1ந் தேதிக்குத் தள்ளி வைத்தார். அப்போது மணி 12 இருக்கும். ஒரு போலீஸ் வேனில் கலைஞரை ஏற்றிக் கொண்டு சிறைச்சாலைக்குக் கொண்டு சென்றனர். கலைஞர் விடுதலையாகி வருவார் என்று ஆவலுடன் காத்திருந்த தி.மு.க.வினருக்கு 'மீண்டும் சிறை' என்றவுடன் உணர்ச்சிகள் பீறிட்டன. இரண்டு பெண்கள் உட்படப் பலபேர் கலைஞர் ஏறியிருந்த வேனை நகர விடாமல் சக்கரத்தின் பக்கத்தில் படுத்துக் கொண்டார்கள். அவர்களை அப்புறப்படுத்தியதும் வேன் புறப்பட்டது. கலைஞர் விடுதலை ஆகவில்லை என்றவுடன் ஆத்திரப்பட்ட தி. மு. க.வினர் 12 பஸ்களை அடித்து நொறுக்கினர். ஒரு ஓட்டல் தாக்கப்பட்டது. அண்ணா சாலையில் இருந்து எழும்பூர் ரயில் நிலையம் வரை ஒரே கல் வீச்சும் கலாட்டாவுமாக இருந்தது.

இதே சமயம் கோட்டையில் மந்திரி சபைக் கூட்டம் நடந்து கொண்டிருந்தது. தி. மு. க.வினரின் வன்முறைப் போக்குகள் பற்றி மந்திரி சபை விவாதித்ததாகத் தெரிகிறது. இதையொட்டி கலைஞரை விடுவிக்கலாம் என்றும் கூடாது என்றும் இருவித கருத்துக்களும் கூறப்பட்டனவாம். பெண்கள் கணிசமான அளவில் கோர்ட்டுக்கு வந்தது முதல்வருக்குக் கவலை அளித்ததாம். பலத்த ஆலோசனைக்குப் பிறகு 'இனி சிறையில் வைக்க வேண்டிய அவசியமில்லை. வெளியே விட்டுவிடலாம்' என்று மனு தாக்கல் செய்யுமாறு தலைமைச் செயலாளர் மூலமாக அரசாங்க வக்கீலிடம் கூறப்பட்டதாம். அதன்படி அவர் பிற்பகல் இரண்டு மணிக்கு மனுவைத் தாக்கல் செய்தார். ''உடனே விடுவிக்கலாம்'' என்ற உத்தரவைக் கோர்ட்டில் பெற்றுக் கொண்டு அதிகாரிகள் சிறைச்சாலைக்குப் பறந்தனர்.

சரியாக நாலரை மணிக்குச் சிறையை விட்டு வெளியே வந்தார் கலைஞர். தி.மு.க.வினரின் சந்தோஷ கோஷம் வானைப் பிளந்தது. முதலில் ஊர்வலமாகவே வீட்டுக்குபோகத்திட்டமிட்டிருந்த கலைஞர் போலீஸின் வேண்டுகோளின்படி சிறைச்சாலையிலிருந்து ராஜாஜி ஹால் வரைக்குமே ஊர்வலமாக வந்தார். ''நான் குற்றவாளியல்ல'' என்று கலைஞர் கூறியிருப்பதால், வழக்கு நீண்ட நாள் நடக்கும் என்பது உறுதி. இரண்டு மணி நேரத்தில் முடிவை மாற்றிக் கொண்ட தமிழக அரசு, தி. மு. க.வின் ஏளனப் பார்வைக்கு உள்ளாகியிருக்கிறது. —ப்ரியன்

புகைப்படம்: சுபா



# கெட்டிக்கார பார்க்

● முதலில் பாம்பே-ஹை. இப்போது நம் தமிழ்நாட்டை யொட்டிய கடல் பகுதியின் ஆழத்தில் எண்ணெய்! இன்று வெள்ளி விழாக் கொண்டாடும் எண்ணெய் எரிவாயு கமிஷனுக்கு ஜூபிலி பரிசு! காவிரி முகத்து வார மண்டலத்தில் கோடிக்கரைக்கு அருகில் எண்ணெய், கடல் ஆழத்தில், பாம்பே ஹை மாதிரி, கடலில் வெகு தூரம் தள்ளியா? அல்ல. வேதாரண்யம் கடற்கரையிலிருந்து பதினைந்து கிலோ மீட்டர் தூரத்துக்குள்!

● கோடிக்கரைக்குத் தெற்கில் பாக் ஜல சந்திப் பகுதியில் உள்ள கடற் பரப்பில் எண்ணெய் வளமுள்ள மணற் பாறை படிமங்கள் ஐம்பது சதுர கிலோமீட்டர் பரப்பு உள்ளதெனக் கணிப்பு.

● 2300 அடி முதல் 2312 அடி ஆழத்தில் கிடைத்திருக்கிறது எண்ணெய். தரம் வெகு உயர்வானது. அப்படியே நேரடியாக உபயோகித்துக்கொள்ளலாம் போல் அத்தனை மெல்லியதாய், சுத்தமாய் இருக்கிறது.

● இன்ன இடத்தில் எண்ணெய் ஊற்று இருக்கிறதென்று புவியியல் வல்லுநர்கள் கண்டுபிடித்த பின் எண்ணெய்க் கிணற்றுக்குக் கனமான களிமண் மூடியிட்டு விடுவார்கள். பின்னர் பெரிய இரும்புக் குழாய் வழியே எண்ணெய் துளியும் சிந்திப் பாழாகாமல் வெகு ஜாக்கிரதையாகக் கொண்டு வருகிறார்கள்.

● ஒரு நாளைக்குக் கிட்டத்தட்ட 1500 பீப்பாய்கள் அளவுக்குக் கிடைக்கத் துவங்கியிருக்கிறது இப்போது. போகப் போக இது இன்னும் அதிகரிக்கும்...

● கடலில் நங்கூரம் பாய்ச்சிக் கொண்டு எண்ணெய்க் கிணறு இறக்கும் குழாய்களும் எந்திரங்களும் கொண்ட கப்பல் 'கெட்டின் பார்க்' கெட்டிக்கார பார்க். அமெரிக்க நாட்டிலிருந்து தருவிக்கப்பட்டது. (ஒரு நாளைக்கு வாடகை: 34,000 டாலர்கள்) கிட்டத்தட்ட எண்பது பேர் இதில் பணியாற்றுகிறார்கள். ஓர் ஐந்து நட்சத்திர ஹோட்டலின் சௌகரியங்கள் அனைத்தும் இதில் உண்டு. இது எண்ணெய் ஊற்றைக் கண்டு பிடிப்பதோடு சரி. பாம்பே-ஹையில் உள்ளது போல் கடல் மீதே மேடை அமைத்துப் பெருமளவில் எண்ணெய் எடுக்கும் பணி இனி தொடங்க வேண்டும்.

● இப்போது கிடைக்கிற எண்ணெயை வைத்துக் கணக்கிட்டால்கூட, சுமார் 22 கோடி ரூபாய்க்கு மேல் அந்நியச் செலாவணி மிச்சமாகும் நமக்கு.

● நம் நாட்டின் மொத்த எண்ணெய்த் தேவை கிட்டத்தட்ட 4 கோடி டன். ஏற்றுமதி மூலம் நாம் சம்பாதிக்கும் அந்நியச் செலாவணியில் முக்கால் பங்கு (சுமார் 3500 கோடி ரூபாய்) எண்ணெய் இறக்குமதிக்கே போய்விடுகிறது. நிலத்தடியிலும், கடலடியிலும் எண்ணெய் இன்னும் கண்டு பிடிக்கப்பட்டு வெளிவரும்போது மேன் மேலும் அதிகச் செலாவணி மிச்சமாகும்.

சரி, இதனால் தமிழ்நாட்டுக்கு என்ன நன்மை? இருக்கிறது. பெட்ரோலியத் துணைப் பொருட்கள் தயாரிக்கும் பணியில் தமிழகத்தில் நிறையத் தொழிற்சாலைகள் துவக்கப்படலாம். எண்ணெய்க் கிணறு தமிழ் நாட்டில் இருக்கிறபடியால், தமிழக அரசுக்கு ராயல்டி தொகை கிடைக்கும்!

— சாருகேசி, தமயந்தி


ஜெயில் சிங்கிற்கும் பஞ்சாப் முதல்வர் தர்பாரா சிங்கிற்கும் இடையே உள்ள பகை தான் 'காலிஸ்தான்' இயக்கம் வலுவடையக் காரணம் என்று சொல்லப் படுகிறது!
காலிஸ்தான் இயக்கம்
தர்பாரா சிங்
ஜெயில் சிங்


உடன் பிறப்பே! அடுத்த நாற்காலிக்குத் தயார்!
தி.மு.க


காமன்வெல்த்
நாடுகள்
சர் நான்! இறங்குய்யா கீழே!

# இதோ ஒரு அதிசய மனிதர்!

சட்டர்ஜி என்றொரு வீரர். பீகார் மாநில அரசின் சாலைப் போக்குவரத்து கார்ப்பொரேஷன் ஜெனரல் மானேஜர். ஸீனியர் ஐ.ஏ.எஸ். அதிகாரி. தமக்குத் தரப்பட்ட பதவி உயர்வை ''வேண்டாம்'' என்று உதறிவிட்ட அதிசய மனிதர்! இதற்கே ரொம்ப நெஞ்சுறுதி வேண்டும் என்றால் இதற்கான காரணத்தை வெளியிட அதைவிடத் தைரியம் வேண்டும். சொல்லுகிறார் இந்தத் தீரர்:

''ஐ.ஏ.எஸ். அதிகாரி என்று பெயரளவில்தான் இருக்கிறதே தவிர இன்று இவர்களுக்கு அதிகாரம் என்பது கொஞ்சமும் கிடையாது. அமைச்சர்களுக்கும் மற்ற ஆளும்கட்சி அரசியல்வாதிகளுக்கும் இவர்கள் ஆமாம் சாமிகளாக இருக்க வேண்டியுள்ளது. நேர்மையான ஓர் அரசு அதிகாரி இன்று அசடு எனவும் கையாலாகாதவன் என்றும் கருதப்படுகிறான்; அவமானப்படுத்தப் படுகிறான்.''

இவ்வாறு பீகார் முதல்வர் ஜகந்நாத மிச்ராவுக்கு அச்சமின்றி எழுதியுள்ளார் சட்டர்ஜி. ஒரு காலத்தில் கலெக்டர், ஐ ஏ எஸ், ஐ ஸி எஸ் என்றால் எவ்வளவு மதிப்பும் மரியாதையும் இருந்தன! அத்தனையையும் அழித்து ஒழித்துவிட்டார்கள் அரசியல்வாதிகள்.

ஒருவருக்கு ஒரு காரியம் ஆக வேண்டியிருக்கிறது; ஃபைல் ஐ ஏ எஸ் அதிகாரியிடம் போகிறது. அரசாங்க விதிமுறைகள் அதற்கு இடம் தரவில்லை என்று காண்கிறார் அதிகாரி. அப்படியே 'நோட்' எழுதுகிறார். அந்த ஆசாமி நேரே அமைச்சரிடம் போகிறான். அமைச்சர் அதிகாரியின் ஆட்சேபணையை ஒதுக்கி, ''எப்படியாவது இதை முடித்துத்தருகிற வழியைப் பாருங்கய்யா'' என்கிறார். 'தாம் நேர்மையாக நடந்துகொண்டது இப்படி அவமானப் படத்தானா' என்ற எண்ணம் அந்த அதிகாரிக்குத் தோன்றத்தானே செய்யும்? அவரது தார்மீகக் கட்டுப்பாடு எத்தனை நாளைக்கு நிலைக்கும்? அதுவும் அரசியல்வாதிகளின் லஞ்ச லாவண்யங்களைக் கண்ணெதிரே தினம்தினம் காண்கின்றபோது!

ஐ ஏ எஸ் அதிகாரிகளுக்கும் அமைச்சர்களுக்கும் இடையில் இருக்க வேண்டிய ஒத்துழைப்பு - சிரிக்க வேண்டாம் - நல்லதொரு குடும்பத் தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே இருக்கவேண்டிய ஒத்துழைப்பு போன்றது. உதாரணமாகக் கணவன் தன் செல்லப் பிள்ளையைத் திருப்திப்படுத்த, தீபாவளி போனஸில் நூறு ரூபாய்க்குப் பட்டாசு வாங்கப்போவதாகக் கூறினால் பொறுப்புள்ள மனைவி உடனே ஆட்சேபிக்க மாட்டாளா? இதே போலத்தான் கட்சிக்காரர் அல்லது தேர்தலுக்கு உதவிய பணக்காரருக்கு அமைச்சர் சலுகை காட்ட விழையும்போது அதிகாரி எச்சரிக்கக் கடமைப் பட்டுள்ளார். கணவன், மனைவியை மதித்தால் இருபது ரூபாய்க்கு மட்டுமே பட்டாசு வாங்குவான். அதிகார வெறிகொண்ட குடும்பத் தலைவனோ, ''நீ யார் கேட்க? நூறு ரூபாய்க்குத்தான் வாங்கியாக வேண்டும்!'' என்று மகன் எதிரே மனைவியைக் கடிந்து கொள்வதுடன் அவளையே பட்டாசு வாங்கிவரச் செய்வான். அமைச்சர்களும் குடும்பத்தலைவன் போலத்தான்!

அரசு அதிகாரிகள் அரசியலை அறியாதவர்கள் அல்ல. தேர்தலில் நின்று பதவிக்கு வருகிறவர்களுக்கு உள்ள சில சங்கடங்களையும் அவர்கள் சிலருக்குக் கடமைப்பட்டுப் போவதையும் உணராதவர்கள் அல்ல. அரசின் விதிமுறைகளுக்கு உட்பட்டு எந்த அளவுக்கு விட்டுக் கொடுக்கலாமோ செய்வார்கள். ஆனால் வரம்பு மீறவோ அல்லது மக்கள் பணம் பெருமளவில் விரயமாகவோ அவர்கள் அனுமதிக்கக் கூடாது. அமைச்சர்களை இச் சந்தர்ப்பங்களில் எச்சரிப்பது அவர்கள் கடமை.

ஒன்றா, இரண்டா? எத்தனையோ பிரச்னைகளை அன்றாடம் அவர்கள் எதிர்கொள்கிறார்கள். எனவே அமைச்சர்களும் உயர் அதிகாரிகளும் அடிக்கடி சந்தித்துப் பேச வேண்டியவர்கள். அதிகாரிகள் அமைச்சரைச் சந்திக்க முடிவதே அபூர்வம்; முதல்வரைக் காண்பதே அரிது எனில் ஆட்சி எப்படி உருப்படும்?

அமைச்சர்களின் போக்குக்கு ஏற்ப அதிகாரிகளும்தான் ரொம்பவும் மாறிவிட்டார்கள். தங்கள் பதவி உயர்வுகளைக் காத்துக்கொள்ள அமைச்சர்களின் கைக் கருவிகளாகி விட்டார்கள். காரணம் ஆட்சிக்கு வரும் அரசியல் வாதிகளின் தரக் குறைவு. இத்தகைய சூழலில் சட்டர்ஜி போன்ற ஒரு சிலரேனும் இன்னமும் இருப்பது அதிசயத்திலும் அதிசயம்.

1981 அக்டோபர் 11

துன்மதி புரட்டாசி 25

மலர்: 40 இதழ்: 11



# கல்கி



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# பஞ்சாபில் பதற்ற நிலை



✖ பல்பீர்சிங் சந்து: கலிஸ்தான் இயக்கத்தின் பிரதம காரியதரிசி

''கலிஸ்தான்'' என பஞ்சாபியருக்குத் தனி நாடு கோரும் பிரிவினை இயக்கத்தினர் இந்தியன் ஏர்லைன்ஸ் விமானத்தை ஹைஜாக் செய்து லாகூரில் இறக்கினர். இந்தப் பயங்கரவாதிகளைப் பிடிக்கவும் விமானத்தையும் பயணிகளையும் விடுவிக்கவும் பாகிஸ்தான் அரசு செய்த உதவிக்கு பாரத தேசமே கடமைப்பட்டிருக்கிறது. இது ஒரு புறமிருக்க பஞ்சாபில் பதற்றநிலை இன்னமும் நீடிக்கவே செய்கிறது....

திரு தர்பாரா சிங் தலைமையிலான இந்திரா காங்கிரஸ் மந்திரி சபை ஆட்சி புரியும் பஞ்சாப் மாநிலத்தில், மாறுபட்ட அரசியல் சக்திகளின் மதவெறி அடிப்படையிலான மோதல்களால் நிர்வாகம் ஸ்தம்பிக்கும் அளவுக்கு நிலைமை மோசமடைந்துள்ளது!

ஜனதா ஆட்சியின்போது, பஞ்சாப் மாநிலத்தில் வென்று, திரு பிரகாஷ் சிங் பாதல் தலைமையிலான அரசை அமைத்தது அகாலிதளம்., அத்தகைய சக்தி வாய்ந்த அகாலிதளம் ஒவ்வொரு தோலாக உரித்து ஒன்றுமில்லாமல் போன வெங்காயம் மாதிரி க்ஷீணமடைந்து பல சிறுபான்மை அகாலி கட்சிகளாகப் பிரிந்து விட்டது. அவை மாறுபட்ட கருத்துக்களும் தேச நலனுக்கு எதிரான முழக்கங்களும் கொண்டு நடுத் தெருவில் சண்டையிட்டு நிற்கின்றன. ''கலிஸ்தான்'' என்ற தனி நாடே கோரும் ஒரு பிரிவு உட்படப் பலப் பல பிரிவுகள்.

வெளி நாட்டில் வாழும் சீக்கியரின் பணத்தையும் ஆதரவையும் கொண்டு பிரிவினைக்கு அடிகோலும் கலிஸ்தான் இயக்கத்துக்கு பஞ்சாபில் ஓரளவு ஆதரவு பெருகி வருகிறது.



✖ பாதல் : ஊசலாடிப்போன ஆசைகள்

தற்போது பஞ்சாபில் மட்டுமின்றி சீக்கியர் உள்ள எல்லா இடங்களிலும் திமர் பிராபல்யத்தைப் பெற்றுள்ளவர் சாந்த் ஜர்னய்ல் சிங் பிந்த்ரன் வாலே எனும் சீக்கியமதத் தலைவர். 'பிந்த்ரன் வாலே தாக்ஷல்' எனப்படும் சீக்கியப் பிரிவின் தலைவரான இவருக்கு 34 வயதாகிறது. ராணுவ பலத்துடன் சீக்கிய மதத்தின் புனிதத்தைக் காப்பாற்றவேண்டும் என்றும் நம்பும் இப்பிரிவினர் சீக்கியர்களுக்குத் தனி நாடு வேண்டும் என்பதிலும் பற்று உள்ளவர்கள்.

அம்ருத்சரில் உள்ள சீக்கியர்களின் தங்கக் கோயில் அருகிலும் மற்றும் சுற்று வட்டாரத்திலும் எவரும் புகையிலை சம்பந்தப்பட்ட பொருட்களை உபயோகிக்கக் கூடாது என்று பல அகாலிதள தலைவர்கள் ஆசியோடு சீக்கிய மாணவர் குழு ஒன்று போராட்டம் நடத்தியபோது, இதனை ஹிந்துக்கள் ஆட்சேபித்தனர், இவ்வருடம் மே மாதம்.

ஆர்ய சமாஜத்தைச் சேர்ந்த சுமார் 10000 ஹிந்துக்கள் ஆயுதங்களோடு, இம்மாதிரியான ,புகையிலை எதிர்ப்புப் போராட்டத்துக்கு அம்ருத்சரில் ஆட்சேபணை தெரிவித்ததைத் தொடர்ந்து பிந்த்ரன் வாலே தலைமையில் 10,000 சீக்கியர்கள் ஆயுதம் தாங்கி மே 31ந் தேதி ஒரு பெரிய ஊர்



✖ போலீஸிடம் சரண் அடைந்த ஜர்னய்ல்சிங் பிந்த்ரன் வாலே




✖ கலிஸ்தான் தனி நாடு தேசப் பட அளவில் தயார்!

வலம் நடத்தினர். தொடர்ந்து சீக்கியர்—ஹிந்துக்கள் இடையே மோதல்...

திரு லால் ஜகத் நாராயண் என்பவர் முன்னாளைய பஞ்சாப் அமைச்சர். முன்னாளைய எம்.பி. 'ஹிந்து சமாசார் பிரஸ்' சார்பாகச் சில பத்திரிகைகளை நடத்தியவர்.

சீக்கியர்களில் ஒரு சாரார் தனி சீக்கிய நாடு கோருவதைப் பலமாக எதிர்த்துத் தம் பத்திரிகைகளில் எழுதியதோடு இத்தகைய கோரிக்கை வாதிகளை 'தேசத் துரோகிகள்' என்றே வர்ணித்தார்.

செப்டம்பர் மாதம் 9ம் தேதி.

காரில் திரு லால் ஜகத் நாராயண் போய்க் கொண்டிருந்தபோது புல்லட் மோட்டார் சைக்கிளில் இருவர் துரத்தி வந்து துப்பாக்கியால் சுட்டு திரு நாராயணைக் கொலை செய்தனர். ஒருவன் பிடிபட்டான்...

இக்கொலைக்கும் பிந்த்ரன்வாலே பிரிவுக்கும் சம்பந்தம் இருக்க முடியும் எனக் கருதி போலீஸ் சாந்த் ஜர்னய்ல் சிங் பிந்த்ரன் வாலேயைக் கைது செய்ய உத்தரவு பிறப்பித்ததை யொட்டி பஞ்சாபில் பதற்ற நிலை! வெளி மாநில போலீஸ், எல்லைப் பாது காப்புப் படை போன்ற பல போலீஸ் படைகள் குவிக்கப்பட்டன.

அம்ருத்சரிலிருந்து 45 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள தனது இருப்பிடமான மேதா சௌக் கிராமத்தில் தான் போலீஸாரிடம் சரண் அடைவதாக ஜர்னய்ல் சிங் பிந்த்ரன் வாலே தெரிவித்ததை யொட்டி அவ்விடத்தைச் சுற்றி ஏக பந்தோபஸ்து.

அப்படியும் சுமார் எழுபதாயிரம் சீக்கியர்கள் அக்காட்சியைக் காணக் கூடினர்.

பெரும்பாலோர் அமைதியாக இருந்தும் ஆயுதம் தாங்கிய சுமார் இருநூறு சீக்கியர் போலீஸைத் தாக்கியதால் போலீஸ் துப்பாக்கிச் சூடு செய்தது. மொத்த உயிர்ச் சேதம் பதின்மூன்று.

முடிவில் சாந்த் ஜர்னய்ல் சிங் கைது செய்யப்பட்டார்.

ஆனாலும் பஞ்சாபில் அமைதியின்மையும், பதற்றமும் நிலவியது.

வெளிநாடு செல்லு முன் பாரதப் பிரதமர் சண்டிகாருக்குப் பறந்து, பஞ்சாப் ஆளும் கட்சித் தலைவர்களையும், எதிர்க் கட்சித் தலைவர்களையும் கலந்து பேசி, அரசியலில் மதத்தைப் புகுத்த வேண்டாம் என்றும், மாநிலத்தில் அமைதியைக் காக்க எல்லாக் கட்சிகளும் ஒத்துழைக்க வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார்.

இந்திரா காங்கிரஸுக்குள்ளேயே பஞ்சாப் முதல்வர் தர்பாரா சிங்கின் கோஷ்டிக்கும், மத்திய உள்துறை அமைச்சர் ஜெயில் சிங்கின் ஆதரவாளர்களுக்கும் இடையில் உள்ள உட்பூசல் காரணமாக, ஜெயில் சிங்கின் ஆதரவாளர்கள்தாம் அகாலி தளத்தில் இம்மாதிரியான தீவிர வாதத்தைக் கிளறிவிட்டு மாநிலத்தின் அமைதிக்குப் பங்கம் விளைவிக்கின்றனர் என்று ஒரு குற்றச்சாட்டு. அகாலிதளத்தினர் இணைந்தால் காங்கிரஸ் ஆட்சி ஆட்டம் கண்டுவிடும் என்பதால் அகாலி தளத்தில் கருத்து வேற்றுமையைப் புகுத்தி இந்திரா காங்கிரஸார் இம்மாதிரி செயல்படுகின்றனர் 'என்றும் ஒரு குற்றச் சாட்டு.

எது எப்படி இருந்தாலும் ஹிந்துக்களும் சீக்கியர்களும் ஒற்றுமையாக வாழ்ந்து வந்தவர்கள், அவ்வொற்றுமையைக் காப்பாற்ற எல்லோரும் உதவ வேண்டும் என்பதுதான் பஞ்சாப் மாநிலத்தில் வசிக்கும் பெரும்பான்மையான சாமானிய சீக்கியர்கள் — ஹிந்துக்களின் கருத்தாக உள்ளது. ஆனால் போட்டி — பொறாமையிலும் அதிகார—பதவி ஆசையிலும் ஆழ்ந்துள்ள தலைவர்களுக்கு இது புரியவில்லையே!

— பி. ரங்கநாயகி



## காமிராவைப் பாராதபோது 'கிளிக்'

சென்னை வைஷ்ணவா கல்லூரியில் பி. ஏ. சரித்திரம் படித்த குமாரி வி. உஷா, உத்ராவின் ரசிகர்களில் ஒருவர். அட்டைப் படங்களைப் பார்த்துக் கமெண்ட் அடிப்பவர், குறைகளைக்கூறவும் தயங்க மாட்டார். ஒருசமயம் ஐந்தாவது வகுப்பு படிக்கும் அக்கா பெண் சாமுண்டீஸ்வரியுடன் ஃபோட்டோ ஸ்டுடியோவுக்கு வந்திருந்தார். ரொம்பவும் கலர் ஃபுல்லாக இருந்த அவர்களது உடைகளைப் பார்த்ததும் ''உங்களை ஒரு கலர்ப் படம் எடுக்கிறேன்'' என்றார் உத்ரா.

பனிச்சென்று ஒளி சிந்திய விளக்குகள் காரணமாய் சாமுண்டீஸ்வரி காமிராவைப் பார்க்க முடியாமல் வேறு எங்கோ பார்க்க, உஷா அவளிடம் பேசிப் பார்வையைத் திசை மாற்றுவதற்குள் படம் எடுத்து விட்டார், உத்ரா.

எல்லாப் படங்களையும் பார்த்து கமெண்ட் அடிக்கும் உஷா தமது படத்தைப் பற்றி அபிப்ராயம் கூறவே மறுத்துவிட்டார். ஆனால் எதிர்பாராத தருணத்தில் எடுத்த படமானதாலேயே மிக எடுப்பாக அமைந்து விட்டது என்று நமக்குத் தெரியத்தானே செய்கிறது!

— கிகி

# வேலைக்குப் போகும் பெண்

நடிப்பு:
டணால் தங்கவேலு

கதை:
சாருகேசி, தமயந்தி

சித்திரம்:
செல்லம்

போட்டோ: உத்ரா

**11**











அப்பிடித்தான், அப்பிடியேதான்! பன்னீரு, அம்மா சொல்றபடி இப்ப செய்டா, புரிஞ்சுதா?

புரிஞ்சுக்கிட்டேன் அப்பா! நாங்க ரெண்டு பேரும் ஆபீசுக்கு ஒண்ணாக் கிளம்ப றும். கிளம்பி அவங்க அவங்க ஆபீசுக்குப் போகறும். அவ்வளவுதானே? போயிட்டு வரும், போயிட்டு வரும்!

போயிட்டு ஜாக்கிரதையா திரும்பி வந்து சேருங்க.

இமுமுவும், பன்னீரும் ஆபீசுக்குக் கிளம்பி னார்கள்.

இமுமு, இங்க வீட்டுக் குப் போய் ஹாய்யா உட் கார்ந்துக்கு! வேணும்னு சுஜாதா, சிவசங்கரி, இந்துமதி, வத்ஸலா நாவல் எல்லாம் நிறைய லைப்ரரிலேருந்து எடுத்துக்கிட்டு வந்து படி!

எப்படிங்க எனக்குப் படிக்கத் தோணும்? எப்படாப்பா அஞ்சு மணி ஆகும், வீட்டுக்கு வந்து உங்களைப் பார்க்கலாம்னுதான் இருக்கும்.

இன்னும் ரெண்டு நாளைக்கி அப்படித்தான் இருக்கும். அப்புறம் நான் ஒண்ணு சொன்னா, நீ ஒம்பது சொல்லி, மூஞ்சியைத் தூக்கி வச்சுப்பே!

அதோ பாருங்க, மாமா ஓடி வரார், குடை எடுத்துக் கிட்டு!

ஐய்யா, உங்க காதிவைட்டு மாமாவா? ஐயோடா, எதுக்கு இமுமு?

ஐயே, உங்க அப்பா—எங்க மாமா வரார்ங்க!

நில்லு. எதுக்கு ஓடி வர்றீரோ தெரியலியே! அம்மா புதுசா ஏதாவும் புரளி பண்ணி, மருமக வேலைக்குப் போகா மியே சம்பளம் மட்டும் கொண்டு வரட்டும்னு சொல்லிட்டாளா?

காசிலிங்கம் ஓடி வந்து களைப்புடன் நின்று—

ஐயோ, நம்ப ஐடியா தெரிஞ்சு போச்சா அத்தைக்கு?

அம்மா இமுமு, அமிர்தம் உங்க ஆபீசுக்கு போன் இருக்கான்னு கேட்டா. உங்க பக்கத்து வீட்டு போன் நெம்பரைக் குடுத்துட்டேன்! அவ போன் பண்ணினா நீ ஆபீசிலேருந்து பேசற மாதிரியே பேசி சமாளிச்சிடு!

# வரமருளும் வலம்புரிநாதர்

## புஷ்பா அசோக்குமார்






⌘ வலம்புரீஸ்வரர் ஆலயக் கோபுரங்கள்

⌘ அம்பிகை வடுவகிர்க் கண்ணியின் விமானத் தோற்றம்.

⌘ ஏரண்ட மகரிஷி திருவலம் சுழியில் மூழ்கி வலம்புரீஸ்வரர் ஆலயத்துக்கு அருகே எழுந்த இடம் இருந்த செல்வகணபதி ஆலயம் எதிரில் ...ன.

பூம்புகார் போயிருக்கிறீர்களா நீங்கள்?

அப்படிப் போயிருந்தாலும் வலம்புரீஸ்வரர் ஆலயத்தைத் தரிசித்திருக்கிறீர்களா நீங்கள்?

இனிய சுகமான கடலலை மதுரமாக நம்மைத் தாலாட்ட அமைதிக்கே அச்சம் தரக்கூடிய ஒரு பேரமைதியுடன் அமர்ந்திருக்கிறார் வலம்புரீஸ்வரர்.

பூம்புகார்ச் சாலையில் நின்று நிதானித்துப் பார்க்கிறோம் நாம்!

வலது கைப்பக்க ஓரத்தில் ''வலம்புரிநாத தேவஸ்தானம் 2 கி.மீ.'' என்ற கைகாட்டி ஒன்று நம்மைத் திருப்பி அனுப்பி வைக்கிறது.

ஒற்றையடிப் பாதையிலே — மண் புழுதி ஏகமாய்க் கிளம்ப — அங்கங்கே நாட்டு ஓடுகள் வேய்ந்த வீடுகளிலிருந்து நம்மை எட்டிப் பார்க்கும் மனிதப் பூக்களை வேடிக்கையாய் ரசித்தவாறே தொடர்ந்து செல்கிறோம்.

''இதுதான் கோயில் என்று ஒருசிலர் சுட்டிக் காட்டியவுடன் திரும்பிப் பார்த்தால் ஒரு கட்டமான சதுரக் கதவு — கம்பிகளிட்டது — நம்மை வரவேற்கிறது.

கோயிலுக்குள் நுழைந்து பிள்ளையார் நமஸ்காரமும், பலிபீட வணக்கமும் நந்தியம்பதியின் உத்தரவும் பெற்று உள்ளே செல்கிறோம்.

கோயில் திறந்து கிடந்தது.

யாருமில்லை.

நல்ல அருமையான ஆடிமாதம் வெள்ளிக் கிழமையில் விடியற்காலையில் யாரொருவரும் வராமல் கோயில் மட்டும் திறந்திருந்தால்?

ஆகா! எவ்வளவு பேரும் புகழும் வரலாற்றுச் சிறப்பும் பெற்ற இதற்கா இந்தக் கதி நேர்ந்தது? மனம் நம்மையும் மீறி



அழத் தொடங்குகிறது. நம் மனத்தின் ஒரு ஓரத்தில்—

''தலமிதை உள்ளில பழவினை போமித்
தல தனியை
வலம்வரின் கீர்த்தி மருவிடும்
மாதேவனை வணங்கில்
துலங்கிடும் காட்சிப் பேரெய்தி
மெய்ஞானச் சுடரொளியாய்
மலமகற்றிப் பிறவா முக்தி
சேர்க்கும் வலம்புரமே''

என்ற ஞானசம்பந்தரின் பாடல் ஒன்று உதயமாகிறது.

''அற்புதமான ஆலயம் இது! எப்படிக் கிடக்கிறது பாருங்கள்? இந்த மூர்த்தி

ஆற்றிய அற்புதம் ஒன்றா இரண்டா?'' என்றார் உடனிருந்த நண்பர்.

நான் அவரை உற்று நோக்கினேன். பின் சன்னமான குரலில் கேட்டேன். ''இந்த வலம்புரீஸ்வரர் என்ற மூர்த்தியின் தாத்பர்யம்தான் என்ன?''

அவர் சொன்னார்.

''ஒரு சமயம் காசி மன்னன் இந்தப் பகுதிகளை ஆண்டபொழுது நடந்தது இது. ஊர் எங்கணும் காவிரியின் வெள்ளம் புதுப் புனலாய்க் கரையை மீறி உடைத்துச் சீறி வந்தது. இந்தச் சமயம் காசி மன்னன் மனம் கலங்கி இறைவனிடம் வேண்டிய போது. 'திருவலம்சுழி என்னும் ஊரில் காவிரி சுழித்து நிற்கிறாள்.... அந்தச் சுழலில் தன்னலம் கருதா மன்னனோ அன்றி மாமுனிவனோ வீழ்ந்திறந்தால் அவ்வெள்ளம் நகருக்குள் பாயாது வலம் சுழித்து ஓடும்' என்ற அசரீரி கேட்கிறது.

இதைக் கேட்ட மன்னன் யோசித்தான். வேறு எவரையும் யாசிக்காது, தானே மடிந்திட முடிவெடுக்கும்போது அங்கு வந்த ஏகரண்ட மகரிஷி அவனைத் தடுத்து 'எல்லார் நலனுக்காகத் துறவியாகிய நானே இறையருள் வேண்டி மறைந்தொழிகின்றேன்' என்று முடித்து விட்டுத் திருவலஞ்சுழிக் காவேரிப் புனலில் குதித்தார்.

''ஆனால் இறைவன் அருளால் சுழலில் சிக்கிய முனிவர் இத்திருவலம்புரீஸ்வரர் ஆலயத்துக்கு வெளியே வந்து எழுந்தார். காவிரியும் இந்த இடத்தில் இடமாக ஓடியது மாறி வலமாக ஓடியது. எனவே இதை வலம்புரீஸ்வரர் ஆலயம் என்கின்றனர்.''

இந்த நேரத்தில் ஆலய அர்ச்சகர் ஒருவர் குறுக்கே வந்தார்.

அவர் எங்களைப் பார்த்து மிக்க அன்புடன் விசாரித்து விட்டு, ஸ்வாமி வலம்புரிநாதரையும், அம்பிகை வடுவகிர்க் கண்ணியையும் தரிசனம் செய்து வைத்தார்.

''ஆலயத்தில் கூட்டம் இல்லையே! ஒரே காலம்தான் பூஜையா?'' என்கிறேன்.

''அஞ்சு காலம் பூஜை இதுக்கு இன்னமும் உண்டு. அளக்க வேண்டிய நெல்லை ஒழுங்கா அளந்தா கூட்டம் வரும். விழா எடுக்கலாம். தினசரி எதுனச்சும் செஞ்சு ஜேஜேன்னு கூட்டத்தை வரவழைக்கலாம். இந்தக் கோயிலுக்குன்னு நஞ்சை 56 ஏக்கரும் 39 சென்ட்டும் இருக்கு. அதே போல புஞ்சை 54 ஏக்கரும் 71 சென்ட்டும் இருக்கு. இது நிலச் சொத்து. இரண்டு கட்டிடம் கூட இருக்கு. அது கூடச் சரியாக் கவனிக்காததாலே ஒண்ணு இடிஞ்சு போச்சு. அது இல்லாம காலி மனை மட்டும் 6 ஏக்கராவும் 85 சென்ட்டும் இருக்கு. இதையும் தவிர வருஷ வருமானம் ரூ. 2325 வருது! இருந்தும் என்ன பிரயோசனம்? இந்த ஸ்வாமிக்குச் செய்ய வேண்டியதை நாங்க ஒழுங்காச் செய்யறோம். எங்களுக்குச் செய்ய வேண்டியதை 'அவங்க' ஒழுங்காச் செய்யலியே!''

''அது சரி... இந்தக் கோயில்ல உள்ள விசேஷங்கள் என்னன்னு சொன்னாத் தெரிஞ்சுக்கிறோம்....''

''இந்த ஸ்வாமியோட நாமதேயத்தைப் பல விதமாச் சொல்லுவா. கைலை நாதர்னும், வலம்புரீஸ்வரர்னும், தக்ஷிணபுரீஸ்வரர்னும் எவ்வளவு சொல்லுவாங்க தெரியுமா? ஒண்ணு ஒண்ணாச் சொன்னாத்தானே உங்களுக்குப் புரியும்... வாங்கோ... ஒரு ஓரத்துக்குப் போவோம்.'' என்று எங்களையும் அழைத்துக் கொண்டார்.

வசதியான இடத்தில் அமர்ந்த பிறகு அவர் சொல்ல ஆரம்பித்தார்.

''ஸ்வாமிக்குக் கைலாச நாதர்னு ஏன் பேர் வந்தது தெரியுமா? ஏதோ ஒரு நிமித்தமா ஈஸ்வரன் உமையைக் கைலாசத்தில் விட்டுட்டு 'இங்க' வந்து மானஸ தவம் பண்ணிண்டிருந்தார். உமைக்கு ஸ்வாமி எங்கே போனார்னு புரியல்லே. யோக சக்தியால எவ்வளவோ முயற்சி பண்ணியும் ஸ்வாமி இருக்கிற இடம் தெரியல்ல.

''அப்போ சிவஸ்வாமின்னு ஒரு ஈஸ்வர பக்தியுள்ள ரிஷி மூலமா உபதேசம் வாங்கிண்ட அம்பாள் ஆண்டவனை இந்த ஸ்தலத்தில் வந்து பூக்களால் தொழுதா! ஸ்வாமி யோக மாயாவியாக மறைஞ்சிருக்கிற இடமல்லவா இது? உடனே அம்பாள் முன்னால் தரிசனம் தந்து அவளை இங்கேயே அணைச்சு ஏத்துக்கிட்டார்.

''ஸ்வாமி கைலாயத்திலிருந்து முதன் முறையா பூமியிலே அம்பாளை அணைச்சி சேர்ந்த இடம் என்கிறதுனால ஸ்வாமி பேரு கைலாச நாதர்னு ஆயிடுச்சு! இதைப் பூலோகக் கைலாசம்பாங்க பெரியவா!

''அதே போல தட்சிண புரீஸ்வரர்னு ஏன் பெயர் வந்ததுன்னா ஒரு சமயம் கார்த்தவீரியார்ஜுனன்னு ஒரு பெரிய சக்கரவர்த்தி இருந்தான். அவன் காலமான பிறகு அவனோட அஸ்தியை எல்லாப் புண்ணிய க்ஷேத்திரங்களிலும் கரைச்சிட்டு வடக்கே கங்கையில் போய்க் கரைக்க வேண்டும்னு ஆசையோட அவனோட மகன் தக்ஷிண வீரியார்ஜுனன்னு ஒருத்தன் வந்துக்கிட்டிருந்தான்.

''அவன் அஸ்தியை ஒரு காவடியில் கட்டிண்டு இந்த வழியே வந்திருக்கிறான். வர்ரச்சே இந்த வழியில் அகஸ்தியர் ஆஸ்ரமம் காவிரி ஆத்தோரத்திலே இருந்திருக்கு. அதைத் தரிசிச்சிட்டு மேற்கொண்டு அங்கேயே ஸ்நானம் செய்து சிரம பரிகாரம் செய்திருக்கான்.

''அப்போ அஸ்திப் பானையிலேர்ந்து, செங்கழுநீர்ப் பூ வாசனை வந்திருக்கு. திறந்து பார்த்திருக்கான். எலும்பைக் காணோம். சாம்பலைக் காணோம். எல்லாமே செங்கழுநீர்ப் பூ! உடனே அகஸ்திய ஆஸ்ரமத்தின் கருணையைப் பார்த்து சந்தோஷப்பட்டு நேரே காவடியைத் தூக்கிண்டு கங்கைக்குப் போய் விட்டான். கங்கையில் போய் அஸ்திப் பானையைத் திறந்தால் மறுபடியும் எலும்பும் சாம்பலும். உடனே இடிஞ்சு போய்ட்டான் ராஜன்!

''அந்த நேரத்தில் ஈஸ்வரன் ஒரு கிழப் பிராமணனா வந்து விவரமெல்லாம் கேட்டுட்டு 'இது அகஸ்தியருடைய ஆஸ்ரம விசேஷம். மீண்டும் திரும்பிப் போவோம்'னு

கூடவே அவனைக் கூட்டி வந்திருந்தார். ஆஸ்ரமம் வந்தவுடன் பழையபடியே சாம்பலும் எலும்பும் செங்கழுநீர்களாய் மாறிடுச்சு.

''உடனே ஈஸ்வரன் அந்தப் பூக்களோடு வலம்புரீஸ்வரர் சுவாமிக்கு வலப்புறமாக அவனை அழைச்சிண்டு போய் ஸ்தலப் பொய்கையை சுத்தப்படுத்தி ஸ்வாமி மேலே சாத்தச் சொன்னார்.

''அவனும் பக்தியோட அந்தப் பூக்களைப் போட்டு பல நாள் இருந்து பூஜை செய்து விட்டுப் போனான். தட்சிண மகாராஜன் பூஜித்துப் போனதால் இதத் தட்சிண புரீஸ்வரர் கோயில்னு சொல்றாங்க!'' என்று திருத்தினார். ஒரு மடக்கு நீர் அருந்திவிட்டுத் தொண்டையைச் செருமிக்கொண்டு ''இறைவன் இருக்கிற இந்தப் பகுதிய மேலப் பெரும்பள்ளம்னுதான் சொல்றோம். அதுக்கும் ஒரு ஐதிகம் உண்டுங்க!'' என்றார்.

நாங்கள் அவரையே பார்க்கிறோம்.

''இறைவனுடைய தலையில் இரண்டு பள்ளங்கள் இயற்கையாகவே இருக்கின்றன.

அந்தப் பள்ளத்தின் முடிவு எங்கே இருக்கிறது என்று யாருக்கும் தெரியாது. எது அபிஷேகம் செய்தாலும் ஈஸ்வரனின் தலைப் பள்ளங்கள் வழியே மறைஞ்சி போயிடறது. எனவே நாங்கள் ஸ்வாமிக்குக் கவசம் போட்டே அபிஷேகம் செய்யறோம்!''

''பிக்ஷாண்டவர்தான் இங்கே பிரசித்தம்னு சொல்லுவாளே! அதைப் பத்திச் சொல்லவே இல்லையே!''

''இங்கிருக்கிற பிக்ஷாண்டவர் ஓடேந்திச் செல்பவரில்லே. வீணை மீட்டிச் செல்றார். பாருங்களேன்'' என்று காட்டினார்.

உண்மைதான், வீணை மீட்டிய கோலத்தில் பிக்ஷாண்டவரின் பஞ்ச லோகத் திருமேனி தகதகக்கிறது.

''இது சமீப காலத்தில்தான் கண்டெடுக்கப்பட்டது. கோயில் திருக்குளத்தில் திருப்பணி வேலை செய்யறச்சே கெடைச்ச ஒண்ணு''

''விசேஷமெல்லாம் எப்போ?''

''தை மாசம் ரெண்டாம் வெள்ளிக் கிழமை. விசேஷம். அப்போ ஏக ஜனங்கள் கூடுவாங்க! இதுக்கு ஸ்தல விருட்சம் பெண் பனைமரம்.''

''தீர்த்தம் எங்கே இருக்கு?'' என்கிறோம்.

அவர் வெளியே வந்து சொன்னார்: ''இதற்கு இரண்டு தீர்த்தங்கள். ஒண்ணு கோயிலுக்குத் தெக்கே இருக்கு. அது சிவ கங்கைத் தீர்த்தம். இன்னொண்ணு செல்வ விநாயகர் கோயிலுக்கு எதிரே இருக்கிறது. அத அங்க தீர்த்தம்னு சொல்லுவாங்க. அந்தத் தீர்த்தத்திலேதான் ஏகரண்ட ரிஷி எத்திரிச்சார்.

''இது இல்லாம அப்பர் சுந்தரர் ஞான சம்பந்தர் ஆக மூணு பேரும் ஏராளமான பாட்டுப் பாடியிருக்காங்க, இந்த மூர்த்தி மேலே.

''இவ்வளவு இருந்தும் என்னங்க பிரயோஜனம்? இப்போ நீங்களும் நானும்தானே பேசிண்டிருக்கோம்!'' அவர் கண்கள் பனித்தன! புகைப்படங்கள்: **கட்டுரை ஆசிரியர்**

# வட்ட மேஜை



● ஐயோ பாவம், எம்.ஜி.ஆர்.! கார்ட்டூனில் — கிண்டல்; ஒரு தலை சுற்றும் விவகாரத்தில் — குத்தல் அதே சமயம் பொன்மனச் செம்மலும் பொன்விழா ஆண்டும் என்று ஐஸ் வேறு!
திருநெல்வேலி தட்சிணாமூர்த்தி

● நான் இருந்த இடத்தில் அவரா என்ற நினைப்பில் அமளிகளை நாட்டில் உருவாக்கி, பொதுச் சொத்துக்குச் சேதம் விளைவித்து, மக்களுக்கும் சிரமத்தைக் கொடுக்கும் எதிர்க் கட்சி அரசியலை அலசி ஆராய்ந்து நடுநிலையோடு துணிச்சலாகக் கண்டித்துத் தலையங்கம் தீட்டிய கல்கியே — வாழ்க, வளர்க!
திருச்சி-12 சி. விக்டர் ஆல்பர்ட்

● உங்கள் தலையங்கம்தான் அபத்தம், அநாகரிகம். இலங்கைத் தமிழர் பிரச்னை— கருணாநிதி கைது இதுபற்றி எழுதுமிடத்தில் கேரள முதல்வர் தோழர் நாயனார் ஏன் வந்தார்? உங்கள் கம்யூனிஸ்ட் எதிர்ப்பை எல்லா இடத்திலும் முந்திரிக் கொட்டை போல் நுழைக்காதீர்கள்.
திருச்சி-14 இரணியல் க. சொக்கலிங்கம்

● டில்லியிலிருந்த தி.மு.க. நாடாளு மன்ற உறுப்பினர்கள் டில்லியில் உள்ள இலங்கைத் தூதரகத்தின் முன் ஏன் மறியல் செய்யவில்லை? இந்திராவிடம் பயமா? அதை விட்டு அதே நாடாளு மன்ற உறுப்பினர்களில் சிலர் அங்கிருந்து இங்கு வந்து, சென்னையில் உள்ள இலங்கைத் துணைத் தூதரகத்தின் முன் ஆர்ப்பாட்டம் செய்வானேன்? எம்.ஜி. ஆருக்குத் தொல்லை கொடுக்கத்தானே?
சென்னை-53 பி. எஸ். ராகவன்

● பொதுமக்களின் நலனை விட அதிகமாகத் தங்களின் சிந்தனையில் இருப்பது 'கலைஞரின் செல்வாக்கை எப்படி ஒழிப்பது' என்பது தான். தெரிந்தேதான் இதனைச் செய்கிறீர்கள் நீங்கள். உங்களையும் புரிந்து-கொண்டுதான் இருக்கிறார்கள் தமிழர்கள்.
மதுரை-1 மா. நீதிபதி

● ''கலைஞர் கைது'' தலையங்கம் 100க்கு 100 மார்க் வாங்கி விட்டது. உலகெங்கிலும் வாழும் கட்சிச் சார்பற்ற தமிழ் நெஞ்சங்களின் படப்பிடிப்பு.
பெங்களூர் எஸ். எம். குப்தா

● ஆராதனை பட விமர்சனம் கண்டேன். கொடுத்த காசுக்குத் 'தண்டக் கணக்கு' காட்டினால் எங்கே படத்தில் வரும் ஆவி தன்னை வந்து பயமுறுத்துமோ என்று 'லாபக் கணக்கு' காட்டியிருக்கிறார் விமர்சகர்.
கோவை ஏ. ஜெயகுமார்

● கல்யாணச் செலவைக் குறைக்கச் சிக்கனமான சில யோசனைகள் வழங்கிய சாருகேசிக்கு ஒரு மாலை போட்டுப் பாராட்டி மகிழலாம். (மலர் மாலை விலை அதிகம் ஆகவே காகிதப் பூ மாலைதான்!)
வடலூர் வெ. லட்சுமி நாராயணன்

● சேலம் உருக்காலை பற்றிய கட்டுரை அருமை. கரடு முரடான விஷயங்களையும் பாமரனுக்கும் விளங்கும் வண்ணம் தருவதில் கல்கிக்கு நிகர் கல்கியேதான்.
விழுப்புரம் கே.எஸ். குமார்

● பிரதமர் இந்திரா காந்தி தங்கள் பக்கமே என்று நிலைநாட்ட திரு மோகனரங்கமும் திரு கலாநிதியும் மிகவும் பாடுபட்டு முயன்றுள்ளனர். 'எதிரிக்கு எதிரி நண்பன்' என்று ஒரு பழமொழி உண்டு. ஆனால் இங்கு 'எதிரியின் நண்பன் தனக்கும் நண்பன்' என்று புதிய மொழியைப் படைக்க இருவரும் பாடுபடுகின்றனர். எதிரும் புதிருமான இரண்டு கட்சிகளும் தன்னை ஆதரிக்கும்படி செய்துள்ள இந்திரா காந்தி சிறந்த ராஜதந்திரிதான்.
பழவந்தாங்கல் வி.ஜி. நேசன்

● சஸ்பென்ஸ் என்றால் இதுதான் சார் சஸ்பென்ஸ். பதினைந்து வாரமாக ஒரே மர்மம்....மர்மம்....மர்மம்.... சந்திரநாத் அவர்கள் ஒருவரும் யூகிக்க முடியாமல் எழுதியுள்ளார். பதினைந்து வாரம்தான் என்றாலும் மனத்தில் பதிந்துவிட்ட வாரங்கள்!
செலக்கரிச்சல் ச. முத்து

● 'நீயா?' கதையில் நல்ல விறுவிறுப்பு. மதுரை வந்த மகேஷ் 'வைகை எக்ஸ்பிரஸ்' வேகத்தில் வேலையை முடித்துக்கொண்டு விட்டாரே! சந்திரநாத்தையே சேரும் இதற்குரிய பாராட்டுக்கள்.
மதுரை ஆர்.வி. பிரசாத்

● இளந்தேவன் கவிதையைப் பாராட்ட எனக்கு வார்த்தைகள் தெரியவில்லை. உள்ளத்தை நெக்குருகச் செய்து மெய் சிலிர்க்கவும் வைத்துவிட்டார். அழியாப் பேறு பெறும் இக்கவிதை.
இனியநல்லூர் எஸ். ஜெ

● ராமுவின் ரத்தத்தை உறைய வைக்கும் ஓவியத்தைக் கண்டதுமே 'எப்போ வருவான் ராஜகுமாரன்' என்று ஏங்க வைத்து விட்டது.
திருவையாறு கி. நரசிம்மன்

## சமைக்க ஆரம்பிக்கு முன்னரே சமையல் முடிந்துவிட்டது!



பஜாஜ் ப்ரஷர் குக்கர் முற்றிலும் அதிகக் கட்டுறுதியான அமைப்புக் கொண்டது. எனவே உஷ்ணத்தை நிலை நிறுத்தி...உணவை விரைவாகச் சமைக்கிறது. அதோடு, அதனால் மிச்சமாகும் எரிபொருள் செலவால் ஒன்றரை வருடத்திலேயே அதன் விலையைத் திரும்பப்பெற்று விடுகிறீர்கள். விசேஷ வாயகல அமைப்பினால் அதிக இடவசதி எனவே உங்கள் பாத்திரங்களைக் கூட உபயோகிக்கலாம்.

பஜாஜ் ப்ரஷர் குக்கர்கள் பல சைஸ்களில் வருகின்றன. அனைத்தும் மிகக் கடுமையான ஐஎஸ்ஐ விதிகளின்படி உருவானவை. அதோடு பஜாஜின் உன்னத தரத்தின்படி படைக்கப் பட்டவை. இந்தியாவெங்கும் 3500க்கும் மேற்-பட்ட விற்பனையாளர்களின் சீரிய விற்பனைக்குப் பின் சேவையை பக்கபலமாகக் கொண்டது. அப்ளையன்ஸ்களில் முடிசூடா மன்னராக பஜாஜ் விளங்கக் காரணம் வேறு வேண்டுமா என்ன?

சிறந்ததையே bajaj பஜாஜ்
வாங்குவீர் வாங்குவீர்

## 15

ஹரியின் முகம் தெளிவாகத் தெரிய வில்லே. ஆனல் குரலில் கனிவு தொனித்தது.

''சொல்லுங்கள் சாந்தி. எனக்கு இன்னும் புரியல்லே!''

அதற்கு அவள் நேரிடையாகப் பதில் சொல்லாமல் புன்னகைத்தாள்.

''ஒரு வேடிக்கை ஹரி. தினம் தினம் இந்த மாதிரி சாவுகளேப் பார்க்கிருேம். அடுத்த நிமிஷம் என்ன நடக்கப் போறதுன்னு யாருக்கும் தெரியாது- ஆனு நாம மட்டும் சாச்வதம்னு தீர்மானமா நம்பிண்டு ஒவ்வொரு காரியமும் பண்ருேம். ரொம்ப ஆச்சரியம் இல்லே?''

''நீங்க தர்ம புத்திரர் மாதிரி பேசறீங்க!''

இவனுக்கு எந்தச் சந்தர்ப்பத்திலும் குறும்புப் பேச்சு எப்படி—வருகிறது என்கிற வியப்புடன் அவள் சிரித்தாள்.

''அத்தனே யெல்லாம் விவேகம் எனக்குக் கிடையாது.''

''உங்க பிரமைகள் என்னன்னு எனக்குச் சொல்லலியே?''

''சொல்றேன்...''

திடீரென்று அவளுள் ஒரு திகைப்பு ஏற்பட்டது.

இவனிடம் எதற்கு இதையெல்லாம் பேச ஆரம்பித்திருக்கிருேம்? ஆனல் அவன் கண்களில் தெரிந்த கனிவு அவள் இதுவரை யாரிடமும் பார்த்திராதது. அந்தக் குறும்புப் பேச்சுக்குப் பின்னல் ஆழம் தெரிந்தது. ஆரம்பத்தில் சுய பச்சாதாபத்தில் மூழ்கியவன் எத்தனே சீக்கிரம் தெளிந்து விட்டான்! தன்னைச் சுற்றிப் பார்க்கத் தெரிந்துகொண்டு விட்டான்!... மற்றவர்களுக்காகக் கரைந்து போகும் மனசாக...

''தினம் தினம் நான் எனக்கு ஒரு வீடு இருக்குன்னு நினேச்சுண்டு பதினேந்து கிலோ மீட்டர் பஸ்ஸிலே இடிபட்டுண்டு போறேன். வீடு பூட்டியிருக்கு. திறந்திருந்தாலும் உள்ளே போக எனக்கு உரிமை இல்லே.''

சட்டென்று அவனுடைய புருவங்கள் மேலே உயர்ந்தன.

''நான் அந்த வீட்டுக்கு எஜமானிங்கிற பிரமை எனக்கு. அடிச்சுத் துரத்தப்படற மாதிரி ஒரு வாரமா தினமும் அனுபவம் ஏற்படறது. இருந்தும் அந்தப் பிரமை போகல்லே. சொரணே கெட்டுப் போற அளவுக்கு....''

''உங்களே எதுக்கு யாரும் துரத்தணும் சாந்தி?''

அவள் சிரித்தாள்.

''இதுவும் எனக்குள்ளே இருந்த ஒருபிரமை தான். என்னேத் துரத்தரதுக்குக் காரணமே இல்லேங்கற பிரமை. எப்படிப்பட்ட சந்தர்ப்பத்திலேயும் திருமண பந்தத்தை முறிக்கக் கூடாதுன்னு ஊறிப்போன நம்பிக்கையினுலே ஏற்பட்ட பிரமை...''

''நான் கல்யாண மாறதுக்கு முன்னுலே நிறையக் கனுக் காணுவேன். திருமண வாழ்க்கைன்னு அது தோழமைக்காக இருக்கணும்னு நினேச்சுப்பேன். ஈச் பர்ஸன் ஷுட் பீ எ காம்ப்ளிமெண்ட் டு தி அதர். ஒரு பாலன்ஸ் இருக்கணும்; தராசிலே நிக்கிற மாதிரி. அந்த மாதிரி ஒரு சங்கத்திலே நல்ல குழந்தைகளே உருவாக்கணும்னு நினேச்சுப்பேன். இப்ப அதெல்லாம் எத்தனே பைத்தியக்காரத்தனமான கனுன்னு புரியறது. அப்படி ஒரு சங்கமம் ரொம்ப அபூர்வமாத்தான் ஏற்படும்.''

ஹரி நிதானமாக வார்த்தைகளேஜோடித்த படி கேட்டான்.

''உங்களுடையது அபூர்வமானது இல்லேன்னு எப்படித் தெரிஞ்சுது?''

''கல்யாணமான புதுசிலேயே தெரிஞ்சு போச்சு. எண்ணங்கள்ளே, பழக்கங்கள்ளே இரண்டு பேருக்கும் ரொம்ப வித்தியாசம்.

# அந்தி நேரத்து ஜெயங்கள்

வாஸந்தி



இருந்தும் இரண்டு பேர் ஆயுசுக்குச் சேர்ந்திருக்கணும்கிற தீர்மானத்தோட ஒரு பந்தத்துக்கு ஒப்புத்துக் கொண்டிருக்கிறப்போ பிரியம்னு ஒண்ணு ஏற்பட்டு எல்லா வித்தியாசத்தையும் சரி செஞ்சிடும்னு நினைச்சேன்.''

''பிரியம் ஏன் ஏற்படலலே?''

''கதையிலே வர மாதிரி காதல்னு ஏற்படாட்டாலும் அவர் என் புருஷன் என்கிற எண்ணத்திலே எனக்குப் பிரியம் ஏற்பட்டது. நம் பிரியத்தை ஏத்துக்கறதுக்கு எடுத்தவர் மனசிலே தாராளம் வேணும் ஹரி.''

''உங்க கிட்ட அவர் அப்படி நடந்துக்கறது ஆச்சரியமா இருக்கு, சாந்தி. உங்களுடைய சிரிப்பு ஒண்ணே ஆளைத் தூக்கிண்டு போயிடும்னு நினைச்சேன்.''

அவள் சிரித்தாள்.

''அவருக்கு வர வர என் சிரிப்பைக் கண்டாலே வெறுப்பு வந்துடுத்து.''

''ஆச்சரியமாயிருக்கு.''

''ரொம்பப் பழைய காலத்து எண்ணங்கள் அவருக்குள்ளே ஊறிப்போயிருக்குன்னு சில சமயம் நான் நினைக்கப்பேன். பெண்டாட்டியோட பேச்சு சிரிப்பு எல்லாம் தனக்காக மட்டும்தான் இருக்கணும்கிற எண்ணம். அந்த மாதிரி ஆண்களுக்கும் இந்தக் காலத்துக்கும் ஒத்து வராது....''

''ரொம்ப டாமேஜிங்காப் பேசறீங்க. எத்தனையோ பெண்கள் கூட ரொம்ப பொஸஸிவ். எங்க ரிஸப்ஷனிஸ்டைப் பார்த்து நான் 'ஹலோ'ன்னு சொன்னாக் கூட, மாயா இரண்டு நாளைக்குப் பேச மாட்டா.''

''பெண்கள் அப்படி இருந்தாலும் கஷ்டம்தான். நானும் வேலைக்குப் போகலேன்னா வீட்டை நடத்தறது சிரமம். நான் வேலைக்குப் போகணும். ஆனா எந்த ஆணோடையும் சிரிச்சுப் பேசக் கூடாதுன்னா நடக்கிற காரியமா? இந்த எண்ணம் அவருக்குள்ளே ஒரு பிசாசாப் போயிடுத்து.''

''ஒரு நாளைக்கு பஸ்ஸிலே ஏதோ கலாட்டா ஆகி நான் வீட்டுக்குப் போகும் போது எட்டு மணி ஆயிடுத்து. எவனோடயோ நான் நேரத்தைக் கழிச்சுட்டு வந்திருக்கேன்னு வீட்டுக்குள்ளேயே விடல்லே. என்னை வெளியிலே நிறுத்தி....''

அவளுக்குத் துக்கத்தில் தொண்டையை அடைத்தது. அன்றைய அவமானம் மறுபடியும் மனசை ஆக்கிரமித்தது.

**''எ**ங்கேடி கிடுகிடுன்னு திறந்த வீட்டிலே நாய் நுழையற மாதிரி நுழையறே?''

''என்ன நீங்க? இன்னும் எத்தனை நாளைக்கு உங்க கோபம் இருக்கும்? ப்ளீஸ்! வழியை விடுங்க. நான் ஆஸ்பத்திரியிலே எவ்வளவு நான் தங்கியிருக்க முடியும் சொல்லுங்க? எல்லோரும் கேட்க ஆரம்பிச்சுட்டாங்க.''

''எவனோடயோ போய் ஒரு வாரமா இருந்துட்டுப் பொய் வேறே சொல்றியா? சொல்லு எல்லார் கிட்டயும். என் புருஷனுக்கு மகா ரோஷம். வேசித்தனம் பண்ணா பொறுத்துக்க மாட்டார்ன்னு!''

க்ரோதத்துடன் அவள் கன்னத்தை மாறி மாறி அடித்தான். அவள் நிலைகுலைந்து போனாள். கன்னத்தில் நெருப்பு வைத்த மாதிரி எரிந்தது. தன்னைச் சமாளித்துக் கொண்டு நிமிர்ந்து பார்க்கையில் கதவு சாத்தியிருந்தது. அதன் பின்னாலிருந்து ''.....சிறுக்கி!'' என்று இரைந்தான்.

அவளுள் திடீரென்று ஒரு வெறுப்புணர்வு ஜ்வாலையாக எழுந்ததும், கிடுகிடுவென்று சாலையில் இறங்கி ஆஸ்பத்திரி வந்து சேர்ந்து ''என்ன?'' என்று கேட்ட ஊர்மிளாவின் மடியில் படுத்து விசித்து விசித்து அழுததும்—

ஒரே ஒரு கேள்வி — விடை தெரியாத கேள்வி — ஒவ்வொரு விநாடியும், எந்த வேலை

அருள்வாக்கு

## ஞானம் அடையச் சாதனங்கள்

இதர வயல்களில் மேயாமல் இருப்பதற்காக நாம் பசுவைக் கட்டிப் போடுகிறோம். மற்றவர்களின் பயிர்களைக் காப்பாற்றுவதற்கு மட்டும் பசுவைக் கட்டிப் போடவில்லை. மற்றவர்களிடமிருந்து அடி வாங்காமல் பசுவைக் காப்பதற்கும் கட்டிப் போடுகிறோம். அது போலவே நாமெல்லாம் பசுக்கள். ஈசுவரன்தான் பசுபதி. நாமும் காமம், குரோதம், போன்ற உணர்ச்சிகளுக்கு ஆளாகிக் கஷ்டப்படாமல் இருப்பதற்காக நம்மையே உறுதியுள்ள கயிறுகளால் கட்டிக்கொள்ள வேண்டும். இக் கயிறுகள்தான் நாம் அனுஷ்டிக்க வேண்டிய சதாசாரங்களும் கர்மாக்களும், பக்தியும். எப்போது பசுவைக் கட்டவிழ்த்து விட வேண்டும் என்று இடையனுக்குத் தெரியும். அப்போது அதை அவன் அவிழ்த்து விடுகிறான். பசுபதியாகிற ஈச்வரனுக்கும் எப்போது நம்முடைய கட்டுக்களிலிருந்து நம்மை அவிழ்த்து விட வேண்டும் என்று தெரியும். அப்போது நமது கட்டுகள் அவிழ்ந்து விடும். கட்டுக்களை முடிவில் அவிழ்ப்பதற்காகவே இப்போது ஆசாரங்கள், அனுஷ்டானங்கள் என்ற கட்டுக்களால் கட்டிக் கொள்கிறோம். நூற் கயிற்றால் கட்டப்பட்ட ஒரு பேல் கட்டு இரும்புத் தகடுகளால் இறுக்கிக் கட்டப்படும்போது நூற் கயிறுகள் தளர்ந்து நழுவி விழுந்து விடும். அது போலவே ஞானம் என்கிற இரும்புத் தகட்டினால் நம்மை இறுகக் கட்டிக்கொண்டால் காம குரோதம் என்கிற நூற் கயிறுகள் தளர்ந்து விழுந்து விடும். இந்த நூற் கயிறுகளான காமக் குரோதாதிகள்தான் நம்மை இவ்வுலகத்துடன் பிணைத்து, பிறப்பு இறப்புக்குக் காரணமாக இருக்கின்றன. இவற்றினின்று விடுபடுவதற்கு யக்ஞம், தபஸ், கர்மாக்கள், ஈசுவர பக்தி என்று பலவிதங்கள் சொல்லப்படுகின்றன. எல்லாம் ஞானத்தை அடைவதற்குச் சாதனங்கள். ஞானம் வந்துவிட்டால் பற்றுக்கள் அற்றுப் போகும். ஈசுவரன் ஞான ஸ்வரூபி, நித்திய முக்தன்.



**—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்**

செய்யப் போகையிலும் குறுக்கே நிற்கிறது இப்போது—

ஏன் அப்படிக் கத்துகிறான்? தானே துரத்திவிட்டு ஏன் அப்படிப் பழியைச் சுமத்துகிறான்? ஆணவமா அல்லது வியாதியா?

நிலாவையே யோசனையுடன் பார்த்துக் கொண்டிருந்த ஹரி, அவளைப் பார்த்து, மெல்ல அனுதாபத்துடன் முறுவலித்தான்.

''இப்ப என்ன முடிவு எடுத்திருக்கீங்க? ஏதாவது புத்திசாலித்தனமா தைரியமா எடுக்க வருமா உங்களுக்கு?''

''இனிமேல் போய்க் கதவைத் தட்டற தில்லேன்னு முடிவு பண்ணியிருக்கேன். எனக்கு ஒரு வீடு இருக்கு. நான் ஒருத்தனுடைய மனைவிங்கறதை மறந்துடப் போறேன்.''

அவன் சிரித்தான். ''ஞானோதயம் ரொம்பச் சீக்கிரமா வந்திருக்கு உங்களுக்கு! இனிமேல் எங்கே தங்குவீங்க?''

''ஹாஸ்டல்லே! இன்னிக்கு அந்த ஆள் இறந்து போனப்போ நான் நினைச்சிண்டேன். சாவு எந்தநிமிஷம் வரும்னு தெரியாதப்போ இப்படி அசட்டுத்தனமா என் வாழ்க்கையைக் கதவு தட்டறதிலேயும், ஒரு மூர்க்கன் கிட்டே 'நான் என்ன தப்புச் செஞ்சேன்னு' நியாயம் கேட்கிறதிலேயும் வீணக்கக் கூடாதுன்னு தோணித்து.''

அவன் மெல்ல அவள் கையை ஆதரவாகத் தட்டினான்.

''ரொம்ப கரெக்ட். விஷ்யூ ஆல் தி பெஸ்ட்!''

''தாங்க்யூ.''

அவள் எழுந்தாள். மனசு சற்று லேசாகிப் போனாற்போல் இருந்தது. அங்கே இருந்த குப்பை கூளங்களைத் தட்டி மெழுகி விட்ட மாதிரி உதடுகளில் ஒரு ஞானப் புன்னகை அமர்ந்தது.

'இன்றைக்கு கௌதம் போகக்கென்று கண்ணை மூடியபோது, அத்தனை அழகும், அத்தனை ஆகிருதியும் அத்தனை காதலும் நினைத்துப் பார்க்காத துரிதத்தில் முடிந்து போனபோது, பிரிந்துபோன அந்த உயிருக்குக் கடைசி நிமிஷ நிராசைகள் எத்தனை இருந்திருக்கும் என்கிற நினைப்பு அதிர்ச்சியைத் தந்தது. இந்த வார்டே இன்று அதிர்ந்து போன மாதிரி இருந்தது. செத்துப் போனவனை விட நம் நிலைமை மோசமில்லை என்கிற உணர்வு பொதுவாக எல்லாருக்கும் ஏற்பட்டு விட்டமாதிரி தோன்றிற்று. அதுவே தான் என் மனசையும் தெளியவைத்திருக்க வேண்டும்...'

சாந்தி தனக்குள் சொல்லிக் கொண்டாள். 'இனிமேல் எந்தப் பைத்தியக்காரத்தனமான பிரமையிலும் நான் இருக்கப் போவதில்லை. என்னால் இங்கிருக்கும் சிலருக்கு சந்தோஷமேற்படுமானால் அது ஒரு சாதனை. நான் இருப்பதால் ஒருவனுள் ஆத்திரமும் அருவையும் கீழ்த்தரமான வார்த்தைகளும் உண்டாகுமானால் அது என்னுடைய தோல்வி. மனுஷன் பிறப்பது சாதனைகளுக்காக. தோல்விகளுக்கு இல்லை. சாதனைகளுக்கு



''தேவலாம்! உங்க குழந்தை எப்போதும் 'துரு துரு'ன்னு இருக்கான்''
'' 'அசர்ன்' டானிக் குடிக்கிறானே!''
-சி. மோகன்தாஸ்

எது மார்க்கமோ அதுதான் என் இருப்பிடமாக இருக்க வேண்டும்.

மறு நாள் காலை மிஸ் வயலெட்டிடம் சென்று நர்ஸஸ் ஹாஸ்டலில் அறைக்கு விண்ணப்பம் செய்தாள்.

''அப்ப ஒரு முடிவுக்கு வந்துட்டே?''

''ஆமாம் ஸிஸ்டர்.''

''நல்லது செஞ்சே. அரவணைச்சு நடக்க ஆணுக்குத் தெரியல்லேன்னு அவன் ஆணே இல்லே — அல்பம்!''

சாந்திக்குச் சிரிப்பு வந்தது.

கல்யாணமே செய்து கொள்ளாத மிஸ் வயலட்டுக்கு எல்லா ஆண்களும் அல்பம் என்று நினைவுக்கு வந்தது.

நாட்கள் வேகமாக நகர்ந்தன. காலையில் ஆஸ்பத்திரி வேலையிலும் மாலையில் அருகில் இருந்த ஹாஸ்டலில் களங்கமில்லாத கன்னிப் பேச்சிலும் சிரிப்பிலும் மனசு லேசாக மிதந்தது. ஹரி இப்பொழுது அதிக நெருக்கமாக இருந்தான். மனத்தளவில் அதிக முதிர்ச்சியைக் காண்பித்தான். கட்டிலிருந்து சக்கர நாற்காலிக்குத் தானாக இறங்கக் கற்றுக்கொண்டு விட்டான். இன்னும் சில நாட்களில் காலிப்பர் பொருத்திக் கட்டையைக் கொடுத்து வீட்டுக்குப் போ என்று சொல்லிவிடப் போகிறார்கள். அவன் போய் விடுவான் என்கிற நினைப்பே மனத்தை என்னவோ செய்தது. அத்தனை ஆப்தமாக எத்தனை பேரால் இருக்க முடியும்?

அன்று மாலை அவள் டியூட்டி முடிந்து ஹாஸ்டலுக்குத் திரும்புகையில் மோஹன் அகர்வால் எதிர்ப்பட்டான்.

''ஹரி இன்னும் சில வாரங்களிலே டிஸ்சார்ஜ் ஆயிடுவான் இல்லே?'' என்றான்.

''ஆமாம்.''

''கால் ஸ்வாதீனமே ஏற்படாதா?''

''ஊஹூம்!''

''அவனைக் கவனித்துக்கொள்ள நர்ஸிங் தெரிந்த யாராவது அகப்படுவார்களா?''

''விசாரித்துப் பார்க்கிறேன்.''

சட்டென்று அவள் மனத்தில் ஒரு விசித்திர எண்ணம் உதித்தது. (தொடரும்)

# சூட்டிங்குகள்
# 100% பாலியஸ்டர்.
# பாலியஸ்டர் பிளண்ட்ஸ்
# மற்றும் காட்டன்



## சிறந்த ரகங்கள். சரியான விலை.

அதிகாரப்பூர்வமான ஏஜெண்டுகள்: (தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரி) ஜே அண்டு ஜே எண்டர்பிரைசஸ், 14/F1 அன்சாரி தெரு, ராம்நகர், கோயமுத்தூர் 9. செமி ஹோல் சேல் டிப்போக்கள்: சென்ட்ரல் டிஸ்டிரிபியூஷன் டிப்போ, C.S.&W. மில்ஸ் காம்பவுண்டு, கோயமுத்தூர் 1.

# வெளிவராதது

**நூ**ல் விமர்சனமே ''கல்கி''யில் வருவதில்லையே என்று பலர் குறைப்பட்டுக்கொள்கிறார்கள். அவர்களைத் திருப்திப்படுத்த இதோ சில வெளிவராத புத்தகங்களுக்குக் குட்டி விமர்சனங்கள்:



ரயில் விபத்துக்களும், தப்பிக்கும் வழிகளும்
எழுதியவர்: கேதார் பாண்டே
விலை ரூ. 15.

சிக்னல் காட்டுவதில் ஏற்படும் கோளாறிலிருந்து, அதிக வேகத்தில் நேரும் விபத்துகள் பற்றிலவரை பலவிதக் கட்டுரைகள், படங்களுடன். சங்கிலியைப் பிடித்து இழுத்துக் காத்துக் கொள்ளும் முறையிலிருந்து, பெரிய விபத்து நேரும்போது, கடைப்பிடிக்க வேண்டிய வழி வரை சகல விவரங்களும் அடங்கியது.

போராட்டங்கள்
படைத்தவர்: கலைஞர்
விலை ரூ. 7-50
(உடன் பிறப்புக்கு எழுதிய கடிதத் தொகுப்பு)

'அன்றாட வாழ்க்கையில் மட்டுமல்ல; ஆட்சி புரியும் அரசை மாற்றக்கூட போராட்டம் நடத்திட வேண்டிய சூழ்நிலை ஏற்படுகிறது!' என்கிறார் பேராசிரியர் தம் முன்னுரையில்.

நம் வீட்டுக் குழாயில் தண்ணீர் வராவிட்டால், உடனே அண்டை வீட்டுக் குழாய்களைப் பிடுங்கி எறிவது போன்ற எளிமையான போராட்டத்திலிருந்து, கும்பல் சேர்ந்து கட்டபொம்மனை எரிப்பது மாதிரியான கடினமான வகைவரை எல்லாவித போராட்டங்களும் தெளிவாக விளக்கப்பட்டுள்ளன.



சப்பைக் கட்டு கட்டுவது எப்படி?
ஆசிரியர்: ஆர். வெங்கட்ராமன்
விலை ரூ. 21-90.

விலைவாசி உயர்வு, லஞ்ச ஊழல் மலிவு முதலிய அம்சங்களில் அற்புதமான சப்பைக் கட்டு யோசனைகள்.

கட்சிக் கூட்டத்தின்போது—
பொதுக்கூட்டத்தில்—
பிரஸ் கான்ஃபரன்ஸ் சமயம்—
நாடாளு மன்றத்தில்—

என்று தனித் தனியே சப்பைக்கட்டு யோசனைகள் விவரிக்கப்பட்டுள்ளன. வெளிநாடுகள் பற்றின (சாதகமான) புள்ளி விவரங்கள் ஒரு ப்ளஸ் பாய்ண்ட்.





ஸாவனீரும், விளம்பரமும்
நூலாசிரியர்: ஏ. ஆர். அந்துலே
விலை ரூ. 10.

பள்ளிகள், கல்லூரிகள், சங்கீத நாடக சபாக்கள் முதலியவற்றுக்கு ஒரு பயனுள்ள புத்தகம் இது. சுலபமான முறையில் விளம்பரம் வாங்கும் விதம், முழு ஸாவனீர் அச்சடிக்காமலே தப்பித்துக் கொள்ளும் வழி முறைகள் எல்லாம் இப்புத்தகத்தில் விவரமாக அடங்கியிருக்கின்றன. அனுபந்தம்: அறக் கட்டளைகளை நிர்வகிப்பது எப்படி? (மூன்று புத்தகங்கள் வாங்கினால் இந்திரா காந்தியின் வண்ணப்படம் இனாம்!)

# புத்தகங்கள்



காணமற் போனவர்கள்
(துப்பறியும் நவீனம்)
ஆசிரியர்கள்: மதியழகன்; பா. ரா.
விலை ரூ. 12.

—துப்பறியும் நிபுணர் சவான் தமக்கே உரித்தான கூர்மையான நகைச்சுவையுடன் காணமற் போனவர்களைக் கண்டுபிடிப்பது நாவலின் சுவையான பகுதி.

பிரதிக்கு முந்துங்கள்!



'மேடையிலிருந்து சினிமாவுக்கு'
நூலாசிரியர்: விசு.
விலை ரூ. 15

'ரசிகர்கள் முன் தோன்றுவது மேடையில்; காமிரா முன் நடிப்பது சினிமா. மனப் பாடம் செய்து பேசவேண்டிய நிலை நாடகத்தில். மனதை—எதிர்பார்க்க வேண்டிய நிலை பாட்டம் பண்ண வேண்டிய நிலை சினிமாவில்.'

கே. பாலசந்தர் முன்னுரையிலிருந்து.

(அனுபந்தமாக, பூர்ணம் விசுவநாதன், ஸ்ரீகாந்த் ஆகியோரின் கட்டுரைகள் இணைக்கப்பட்டுள்ளன.)

'ஆலயம் தொழுவது சாலவும் நன்று'
விலை ரூ. 5.

இன்று அ.தி.மு.க.வில் உள்ள முன்னாள் தி.மு.க. பிரமுகர்களின் மெய்சிலிர்க்கவைக்கும் அனுபவங்கள். மூகாம்பிகை அம்மன், மாங்காடு கோயில் இன்னும் பல புண்ணிய தலங்களின் புகைப்படங்கள் கொண்டது.

நினைவிருக்கட்டும்—
இது ஒரு 'ஆரெம்வி' பிரசுரம்!



கற்பனை:
ஈஸ்வர்குமார்

விவாகம், விவாகரத்து
எழுதியவர்: சரிதா
விலை ரூ. 6-50

குறைந்த விலைக்கு நிறைந்த விவரங்கள் அடங்கிய ஒரே புத்தகம்! சினிமா நடிக, நடிகையருக்கு ஒரு வரப்பிரசாதம்! இத்தனை சட்ட நுணுக்கங்கள், இவ்வளவு தெளிவாக எந்தப் புத்தகத்திலும் கூறப்பட்டது கிடையாது. (லட்சுமியின் முன்னுரையுடன்)





# சொப்னா எனும் ஒரு சொர்க்கம்

## —ராஜேஷ்குமார்—

கிருஷ்ணமூர்த்தி கொஞ்சம்கூட எதிர்பார்க்கவில்லை.

வேளாண்மைப் பல்கலைக் கழகத்தை ஒட்டினாற்போலிருந்த அந்த பொட்டானிகல் கார்டனில் — உச்சி வேளையில் அவனுடைய பழைய காதலி சொப்னா தன் கணவரோடு எதிர்ப்படுவாள் என்று அவன் கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை. சிவப்பாய்ப் பூத்துக் கொட்டிய வாதநாராயண மரத்துக்குக் கீழே — செழித்துக் கிடந்த புல்வெளியில்—குப்புறப்படுத்தபடி விழிகளைமட்டும் உயர்த்தி அவர்களையே பார்த்தான் கிருஷ்ணமூர்த்தி.

சொப்னாவின் கணவன் குள்ளமாய், கறுப்பாய், குண்டாய் ஏகப்பட்ட வழுக்கையோடு தெரிந்தான்.

சொப்னா சட்டென்று தலையைக் குனிந்தபடி — தன் கணவரோடு அவனைத் தாண்டிச் சென்றாள். ஒரு இருபதடி தூரம் சென்றதும் திரும்பிப் பார்த்து — கிருஷ்ணமூர்த்தியை நோக்கி ஒரு சிநேகபாவமான புன்னகையை வீசினாள். தன் கணவரை முன்னே கொஞ்சம் நடக்கவிட்டு அவள் கொஞ்சம் பின்தங்கி, 'அங்கேயே இருங்கள் நான் வருகிறேன்' என்பது போல் ஜாடை காட்டினாள்.

கிருஷ்ணமூர்த்தி புளகாங்கிதமடைந்து—அப்படியே புல்லரித்துப் போனான்.

'சொப்னா இன்னமும் என்னைமறக்கவில்லை!' —நினைப்பே அவனுக்கு ஏகமாக இனித்தது. மனம் பழைய நினைவுகளுக்குத் தாவியது.

சொப்னா குஜராத்திக் குடும்பத்தைச் சேர்ந்தவள்.

சென்னையிலேயே பிறந்து வளர்ந்ததன் பயன் அவளுக்கு நன்றாய்த் தமிழ் பேச வந்தது. செக்கச் சிவந்த பப்பாளி நிறம் அவளுடைய ஸ்பெஷாலிட்டி. வசதிக் குறைவான குடும்பத்தில் இருந்தாலும் வனப்பமாய் இருந்தாள். எந்த ஆணையும் கிறங்கடிக்கிற அழகு அவளுக்கு இருந்தாலும் அவளே கிறங்கிப் போனது கிருஷ்ணமூர்த்தியின் கம்பீரமான தோற்றத்தைக் கண்டு. இண்டர் காலேஜின் பேச்சுப்போட்டி அவள் படிக்கும் கல்லூரியில் நடந்தபோது அவளுடைய கல்லூரியின் சார்பாய்ப் பேச வந்த கிருஷ்ணமூர்த்தியைப் பார்த்து மனசைச் கலபமாய்த் தூக்கிக் கொடுத்து விட்டாள்.

பிறகென்ன?

சென்னையின் ஒவ்வொரு தியேட்டரும், ஒவ்வொரு ரெஸ்டாரண்டும், மெரினா பீச்சின் ஒவ்வொரு சதுர அடியும் அவர்களுடைய காதலை வளர்த்தது. கிருஷ்ணமூர்த்தி சொப்னாவின் உடம்பைத் தொட முயன்ற போதெல்லாம் — அவள் நாசுக்காய் நழுவினாள். திட்டவட்டமாய்ச் சொன்னாள்.

''முதலில் படிப்பு முடியட்டும், வேலை கிடைக்கட்டும்.'' கல்யாணம் நடக்கட்டும்—அப்புறம் உங்களுடைய கைகள் என்மேல் படட்டும்.''

அது ஒரு ஞாயிற்றுக் கிழமையின் பிற்பகல்.

சொப்னாவை நான்கு மணிக்கு மெரினாவுக்கு வரச் சொல்லி யிருந்தான் கிருஷ்ணமூர்த்தி. சொப்னா நான்கு மணிக்கு மெரீனாவின் வழக்கமான இடத்துக்குச் சென்ற போது கிருஷ்ணமூர்த்தி ஒரு காரோடு காத்திருந்தான்.

''கார் என்னோட ப்ரண்ட் பிரதீப் போடது. நாம ரெண்டு பேரும் இப்போ ஜாலியா மகாபலிபுரம் போகப் போறோம்.''

''மகாபலிபுரமா? இப்பவா? நோ...நோ. ஐ காண்ட்... இப்பப் போனா எப்பத் திரும்பறதாம்? ராத்திரி ஆயிடாதா?'' — சொப்னா தலையை ஆட்டினாள்.

''ராத்திரியானா இப்ப என்னவாம்? இன்னிக்குப் பௌர்ணமி! மகாபலிபுரம் பீச்சில் உட்கார்ந்துவிட்டு அந்தப் பூர்ண சந்திரனை விடிய விடியப்பார்த்துண்டே இருக்கலாம்.''

''நான் ராத்திரி எட்டு மணிக்கெல்லாம் வீட்ல இருக்கணும். இல்லேன்னா எங்கம்மா குதறிடுவா...''

''ராத்திரி எட்டுமணிக்குத்தானே நீ வீட்ல இருக்கணும்! அதுக்குள்ளே போயிட்டு வந்துடலாம். வா சொப்னா...!''

சென்னை நகர எல்லையைத் தாண்டி—

பொட்டல்களாய் வந்து கொண்டிருந்த நிலங்களை யெல்லாம் தாண்டி—

சவுக்கு மரத் தோப்புகள் வர ஆரம்பித்த போதுதான் தன் திட்டத்தைச் செயலாக்க ஆரம்பித்தான் கிருஷ்ணமூர்த்தி.

ஆள் நடமாட்டமற்ற அந்தச் சாலையின் ஓரமாய்க் காரை நிறுத்திக் கொண்டான். ''நீ என் அருகில் வந்து அமர்ந்தால்தான் கார் கிளம்பும்!'' என்று அடம் பிடித்தான்.

இவனை எதிர்ப்பது முட்டாள்தனம். அவன் வழியிலேயே நடந்து போய் — அவனை ஏமாற்றி விட்டுத் திரும்ப வேண்டும்.

''என்ன யோசிக்கிறே சொப்னு?''

''யோசிக்கல்லே கிருஷ்! ஆச்சரியப்பட்டுட்டிருக்கேன்... என்னோட உடம்பு மேல் உங்களுக்கு இருக்கிற ஆசையை நினைச்சு ஆச்சரியப்படறேன். நினைச்சா ஒரு பக்கம் எனக்குப் பெருமையாக் கூட இருக்கு. உங்களுக்கு இவ்வளவு ஆசை இருக்கிறதைப் பார்த்து நான் ஒரு முடிவுக்கு வந்துட்டேன் கிருஷ்! இன்னைக்கு நான் உங்கள் காதலி. இந்த உடலை இன்னிக்கு உங்களுக்குக் கொடுத்து — அந்த ஸ்பரிசத்தை நானும் வாங்கிக்கிறதா முடிவு பண்ணிட்டேன்...''

''ரியலி....!'' — விழிகள் விரியச் சொப்னுவைப் பார்த்தான் கிருஷ்ணமூர்த்தி.

''சர்ட்டன்லி!'' — சொப்னு சொல்லிக் கொண்டே காரை விட்டு இறங்கி அவனுக்குப் பக்கத்தில் வந்து அமர்ந்தாள்.

''தட்ஸ் ஃபைன்!''

காரைக் கிளப்பினான் கிருஷ்ணமூர்த்தி.

செஞ்சேரிப்பாக்கம் கிராமம் தட்டுப்பட்டது. சின்னதாய் ஒரு கடை வீதி தெரிய, அதன் ஓரத்தில் சென்னை செல்லும் பஸ்கள் இளைப்பாறிக் கொண்டிருந்தன.

''கிருஷ்!...தாகம் தொண்டையை வறட்டுது... அந்தப் பெட்டிக் கடைக்குப் பக்கத்தில் காரை நிறுத்தி ஒரு சோடா வாங்குங்களேன்....''

''இதோ!'' — காரின் வேகத்தைச் சட்டென்று குறைத்து, பெட்டிக் கடைக்கு முன்னால் நிறுத்தினான் கிருஷ்ணமூர்த்தி. காரை விட்டு இறங்கிப் பெட்டிக் கடையை அவன் நெருங்கிய அதே விநாடி—

சொப்னு காரின் கதவைப் பிளந்து கொண்டு வெளியே வந்தாள். சென்னை பஸ்ஸை நோக்கி ஓடினாள்.

சோடா பாட்டிலை வாங்கிக் கொண்டு வந்த கிருஷ்ணமூர்த்தி திகைத்தான்.

''சொப்னு!சொப்னு!''—கத்திக்கொண்டே கையிலிருந்த சோடா பாட்டிலோடு ஓடினான்.

அதற்குள் ஸ்வப்னு பஸ்ஸுக்குள் ஏறி விட்டிருந்தாள்.

கிருஷ்ணமூர்த்தியும் பஸ்ஸில் தாவி ஏறினான். முகமெல்லாம் சிவக்க அவளை நெருங்கிக் கத்தினான்:''என்ன சொப்னு இது...?''



பஸ்ஸில் இருந்தவர்களின் பார்வை முழுவதும் இருவரின் மீது படிய, சொப்னா பற்களைக் கடித்துக் கொண்டு தாழ்ந்த குரலில் கிருஷ்ணமூர்த்திக்கு மட்டும் கேட்கும்படியாய்க் கர்ஜித்தாள். ''இனிமே அதிகப்படியா ஒரு வார்த்தை பேசினாலும் மரியாதை கெட்டுப் போயிடும் கிருஷ்ணமூர்த்தி! பேசாமல் பஸ்ஸை விட்டு இறங்கிடு... கிராமத்து ஜனங்க கிட்ட விஷயத்தை நான் சொன்னால் என்ன ஆகும் தெரியுமா?... நீயும் காரும் உருப்படியா மெட்ராஸ் போய்ச் சேர மாட்டீங்க...ம்... நல்ல பிள்ளையா பஸ்ஸை விட்டு இறங்கிடு பார்க்கலாம்...''

கிருஷ்ணமூர்த்தி முகத்தை ஒரு முழ நீளத்துக்குத் தொங்கப் போட்டுக் கொண்டு கையில் சோடா பாட்டிலோடு மௌனமாய் பஸ்ஸை விட்டு இறங்கினான்.

இந்தச் சம்பவம் நடந்த அடுத்த ஒரு வாரத்துக்குள், சொப்னாவின் அப்பாவுக்குக் கோயமுத்தூருக்கு மாற்றல் கிடைக்க கிருஷ்ண மூர்த்தியைச் சுத்தமாய் மறந்து விட்டுக் கோவைக் கல்லூரியில் சேர்ந்தாள்.

ஐந்து வருஷ அஞ்ஞாத வாசத்துக்குப் பிறகு—

இன்றைக்குத்தான் — இந்த வேளாண்மைக் கல்லூரி பொட்டானிகல்கார்டனில் கிருஷ்ணமூர்த்தி சொப்னாவைப் பார்த்தான்.

இப்போது கிருஷ்ணமூர்த்தி — பழைய கிருஷ்ணமூர்த்தி இல்லை. பணக்காரச் சித்தப்பா இருந்தவரைக்கும் கரன்சி நோட்டுகளோடு விளையாடிக் கொண்டிருந்த கிருஷ்ணமூர்த்தி அவர் திடீரென்று ஒரு நாள் ஹார்ட் அடாக்கில் தலையைச் சாய்த்ததும் வாங்கின கடனுக்காக — கடன்காரர்களும் மார்வாடிகளும் அவருடைய சொத்தை 'அட்டாச்' செய்தபோது அதிர்ந்து போனான்.

---

''உலகம் ரொம்ப கெட்டுப்போச்சு.''

''அப்படி என்னதான் நடந்தது?''

''எவனோ ஒரு திருட்டுப் பயல் செல்லாத நோட்டை என்னிடம் தள்ளியிருக்கான்.''

''அப்படியா காட்டுங்க பார்க்கலாம்.''

''காலேதான் ஓட்டல் பில்லுக்காக அதைக் கொடுத்தேன்.''

-செம்பூர் சந்துரு



ஆறு மாதத்துக்கு முன்புதான் சென்னையை விட்டுக் கோவைக்கு ஓடிவந்து சித்தாபுதூரில் உள்ள ஒரு ஆட்டோமோபைல்ஸ் காரியேஜில் தினக் கூலி எட்டு ரூபாய் வேலையில் சேர்ந்தான். அவனுக்குப் படுக்கையும் அங்குதான்.

சொப்னா வேகமாய் அவனை நெருங்கி வந்தாள்.

''கிருஷ்!'' என்றாள் நாத் தழுதழுக்க. விழிகளில் நீர் பளபளத்தது. கிருஷ்ணமூர்த்தி அலட்சியமாய் உதட்டைக் கடித்தான். ''பரவாயில்லையே... எம்பேரு கூட உனக்கு ஞாபகம் இருக்கா? கூட வந்தக் கிழவன் யாரு? உம் புருஷனா?''

''ஆமாம்!'' கண்ணீரோடு தலையசைத்தாள் சொப்னா.

''உம் புருஷன் என்ன வேலையில இருக்கார்?''

''அவர் ஒரு சயண்டிஸ்ட்.''

'பணக்காரரா?''

''உம்...''

''அதான் கிழட்டு மாடா இருந்தாலும், பரவாயில்லேன்னு புடிச்சிட்டியா?''

''நீங்க நினைக்கிற மாதிரி அவர் இல்லை கிருஷ்! நேரிடையாவே என்னைக் கல்யாணம் பண்ணிக்கிறியான்னு கேட்டுட்டார். என்னுடைய குடும்பப் பொறுப்பை பூராவும் அவர் ஏத்துக்கறதாச் சொன்னார். நானும் ஒத்துக்கிட்டேன். இப்போ எனக்குக் கல்யாணம் ஆகி மூணு வருஷம் முடியப் போறது. நானும் சந்தோஷமா இருக்கேன். என்னுடைய குடும்பமும் நல்ல நிலைமைக்கு வந்துடுச்சு!''

சீறினான் கிருஷ்ணமூர்த்தி. ''நீ நல்ல நிலைமைக்குவந்துட்டே. ஆனாஎன்னைப்பார்த்தியா? எப்படிச் சீரழிஞ்சு போய்க் கிடக்கிறேன்! என்கூட ஒண்ணாவே சுத்திட்டிருந்த நீ — இப்ப என்னை மட்டும் அதள பாதாளத்தில தள்ளிட்டு மேலே போக நினைக்கிறே! நான் விடமாட்டேண்டி!... பை...த...பை...நம்ம ரெண்டு பேரோட காதல் விவகாரத்தை உன் புருஷனுக்குத் தெரிவிக்கிறேன்!''

''ஐயோ!'' — காதுகளைத் தன் கைகளால் பொத்திக் கொண்டாள் சொப்னா. ''கிருஷ்! தயவு செஞ்சு அவருக்கு நம்ம விவகாரத்தைத் தெரிவிக்காதீங்க... அவருக்கு விஷயம் தெரிஞ்சா அவ்வளவுதான். நான் தற்கொலை பண்ணிக்கிறதைத் தவிர வேறே வழியே எனக்கில்லை. அவர் ஏற்கனவே சந்தேகப் பேர்வழி.''

''இந்தக் கிழட்டுப் பசங்களே இப்படித்தான்! ஐம்பத்துக்கு அழகான பொண்டாட்டியாக் கட்டிக்குவானுக... சந்தேகப் பட்டுக்கிட்டும் இருப்பானுக!'' சிரித்தான் கிருஷ்ணமூர்த்தி.

''அவர் டீனோடு பேசிட்டு வர்ற நேரமாயிட்டுது கிருஷ்.... நான் வர்றேன்...''

''இரு! நம்ம பழைய உறவைப் புதுப்பிச்சுக்கலாம்னு பார்க்கிறேன்...''

''வேண்டாம், கிருஷ்... தயவு செய்து வேண்டாம்...''

# வீட்டில் அனைவரின் கேசப் பராமரிப்புதானே? அதற்கு நம்பகமானது, விசேட ஃபேமிலி ஷாம்பூ பாமோலிவ்.



பாமோலிவ் ஷாம்பூ:
ரெகுலர், அல்லது
கூடுதலான
போஷாக்கிற்கு எக்




பாமோலிவ். எல்லா வகைக் கேசத்திற்கும் ஏற்ப விசேட முறையில் தயாரிக்கப்பட்டுள்ளது. அது, வளமையான நவீன ஷாம்பூ. உங்கள் கேசத்தை நன்கு தூய்மை துலங்க வைக்கிறது. குழந்தைகளின் மென்மையான கேசத்திற்கோ மிகவும் ஏற்றது.

அது மட்டுமா? இவ்வகை ஷாம்பூக்களிலே சிக்கனமானது. பாமோலிவ் ஷாம்பூ—குடும்ப பட்ஜெட்டிற்கும் ஏற்றது.

**குடும்பத்தினர் கேசப் பராமரிப்புக்கு நேசமானது-உங்கள் பட்ஜெட்டிற்கும் ஏற்றது**

GK&E PS.7 TM

# JOHNSON®

# மிக்ஸர் கிரைண்டர்

## புதிதாக மாற்றியமைக்கப்பட்டதால் மேன்மையாக இயங்குகிறது: விரைவாகவே குளிர்ச்சியடைகிறது.

தீவிர ஆராய்ச்சி மற்றும் கடும் உழைப்பின் விளைவாக ஜான்ஸன் அளிக்கும் புதிய, மேன் படுத்தப்பட்ட மிக்சர்-கிரைண்டர் எல்லா வேலைகளையும் சிறப்பின் சிகரமாகச் செய்கிறது.



**கிளர்ச்சியூட்டும் புது அம்சங்கள் பாரீர்!**

**முழுமையான செயலாற்றலுக்காக தனிச்சிறப்பு வாய்ந்த பிளேடுகள்**



இரு கிண்ணங்களிலும் அமைக்கப்பட்ட புதிய பிளேடுகள் மேலும், கீழும் மற்றும் சுழன்றும் இயங்குவதால் முழுமையான செயலாற்றல் கிடைக்கிறது. கட்டிகளோ, தானியங்களோ இருக்க வாய்ப்பில்லை.

**மேல்பாகத்தில் இடைவெளி இருப்பதால் துரித குளிர்ச்சி**



சூடான காற்று துரிதமாக மேல்பாக இடைவெளியிலிருந்து வெளியேறுவதால் மோட்டார் சூடாகாமல் 45 நிமிடங்கள் தடையின்றி இயங்க முடிகிறது. சாதாரணமாக மோட்டார் எரிந்து விடும் அபாயமில்லை.

**புதிய கல்வை கிண்ணம் தாராளமான காற்றோட்டத்திற்கென.**



கல்வைகிண்ணத்தின் வளைந்த உட்பாகம் பிளேட் இயங்குவதற்கு வாகாக அமைக்கப்பட்டிருக்கிறது. சீரான கல்வை கிடைப்பதோடு சரியான அளவுதான் இதில் அடங்கும்.

**எவர்சில்வர் கிண்ணத்தில் சீரியமுறையில் அமைக்கப்பட்ட கைப்பிடி**

சீரிய முறையில் அமைக்கப்பட்ட கைப்பிடி எவர்சில்வர் கிண்ணத்தைக் கையாள எளிதாகவும், சௌகரியமாகவும் இருக்கிறது.

**சுகாதாரத்திற்கென இரு கிண்ணங்கள்; பாதுகாப்புக்கென இரு பிளேடுகள்**



இரு தனி கிண்ணங்கள் இருப்பதால் கல்வை செய்தவுடன் கழுவும் தொல்லையில்லை. வேறு கிண்ணத்தில் அரைக்கலாம். சிரமம் குறைவு. மில்க் ஷேக்குகளில் மசாலா மணம் கலப்பதில்லை. உறுதியாக இணைக்கப்பட்ட பிளேடுகள் முழுமையாக பாதுகாப்பு அளிக்கின்றன. இயங்கும்போது பிளேடுகள் பறந்து செல்லும் அபாயமில்லை.

**ஜான்ஸன் மிக்ஸர் கிரைண்டரின் முதன்மையான சிறப்பு அம்சங்களும் இதிலே உள்ளன.**

- துப்புரவாகச் சுத்தம் செய்ய எளிதாகக் கழற்றக்கூடிய பாகங்கள்
- செம்மையாக வேகத்தை மாற்ற மேன்மையான இஞ்சர் விசை.
- ஒரு வருட உத்திரவாதம் மற்றும் சிறப்பான பின் விற்பனை பணி.

**JOHNSON**

ஆற்றலிலும், இயக்கத்திலும் இணையிலாச் சிறப்பு கொண்டது.

Parade/BE/8122

''ஒரே ஒரு தடவை உன் ஸ்பரிசம்...''

''அப்போ இன்னிக்கு ராத்திரி ஒரு பதினொரு மணி சுமாருக்கு லாலி ரோட்ல இருக்கிற ஏழாம் நம்பர் பங்களாவுக்கு வாங்க... பங்களாவுக்குப் பின்புற வழி ஒண்ணு இருக்கு. அதுல வாங்க... என்னோட கணவர் இன்னிக்கு இரவு பத்து மணி ப்ளேட்ல பெங்களூர் போறார்.. நாளைக்கு சாயந்தரம்தான் வருவார்.'' — சொப்னா சொல்லச் சொல்ல...

''அடி சக்கை!'' என்றான் கிருஷ்ணமூர்த்தி உற்சாகமாக.

**லா**லி ரோடில் இருக்கிற அந்த ஏழாம் நெம்பர் பங்களாவின்பின் பக்கம் கதவின் அருகே கிருஷ்ணமூர்த்தி வந்து நின்றபோது மணி சரியாய்ப் பதினொன்று.

கிருஷ்ணமூர்த்தி 'ஷேவ்' செய்து முகத்தை பௌடரால் குளிப்பாட்டியிருந்தான். தலைக்கு எண்ணெய் தடவி முறையாய் வாரியிருந்தான். 'ட்ரை க்ளினர்ஸ்' கடையில் வாடகைக்கு வாங்கிய பாலியஸ்டர் சட்டையிலும் உல்லன் பேண்டிலும் எடுப்பாய் இருந்தான்.

பாதையின் இடையே — இருட்டில் மங்கலாய்த் தெரிந்த ரோஜாத் தொட்டிகளை ஓசைப்படாமல் தாண்டி, செம்பருத்திச்-செடிகளின் ஊடே நுழைந்து வெளிச்சத்தில் தெரிந்த அந்த அறையை நெருங்கினான் கிருஷ்ணமூர்த்தி.

அறையை நெருங்க—

ஏதோ பேச்சுக் குரல் கேட்க, சட்டென்று நின்றான்.

ஒரு ஆண் குரல், ஒரு பெண் குரல்.

அறையின் ஜன்னல் கம்பிகளைப் பற்றி—ஓசைப்படாமல் தொற்றி ஏறி அறையின் உள்ளே எட்டிப் பார்த்தான் கிருஷ்ணமூர்த்தி.

சொப்னா சொல்லிக் கொண்டிருந்தாள், தன் கணவனிடம்.

''வந்துடுவான்! நிச்சயமா வந்துடுவான்! என்மேலே அவனுக்கு அப்படியொரு வெறி!''

''சோதனைக்கு வேண்டிய முன்னேற்பாட்டையெல்லாம் செஞ்சு முடிச்சுட்டேன் சொப்னா... அவன் வந்ததுமே முதல்ல அந்த காம்போஸ் கலந்த காப்பியைக் குடு. குடிச்ச ரெண்டாவது விநாடியே ஆள் மயங்கிடுவான். அப்புறம் ஆளை லேப்புக்குக் கொண்டு வந்துடலாம்...''

சொப்னா அவர் தோளில் சாய்ந்தபடி கேட்டாள்: ''என்னங்க... அந்தக் கிருஷ்ணமூர்த்தியோட உடம்பில இருக்கிற மொத்த ரத்தத்தையும் 'பம்ப்' பண்ணி வெளியே எடுத்துட்டு — நீங்க புதுசாக் கண்டு பிடிச்சிருக்கிற இந்த நீல நிற ரத்தத்தைச் செலுத்தப் போறீங்களே! இந்த நீல நிற ரத்தம் அவனோட உடம்புக்கு சூட் ஆகும்னு நினைக்கிறீங்களா?''

''சந்தேகம்தான் சொப்னா! எலி-முயலுக்கு ஓரளவு சக்ஸஸ் ஆச்சு! என்னுடைய ஆராய்ச்சியின் நோக்கமே மனித உயிருக்கு ஒரு மாற்று ரத்தத்தை — அதுவும் வேறு ஒரு நிறத்தில் தயாரிக்க வேண்டும் என்பதுதான். ம்... பார்க்கலாம்.... ஒரு காலத்தில் உன்னைக் காதலித்து அவமானப்பட்ட கிருஷ்ணமூர்த்தி என்கிற ஒரு மனித ஜீவனை என்னுடைய ஆராய்ச்சிக்காகப் பயன்படுத்தப் போறேன்... சோதனை சக்ஸஸ் ஆனால் அவன் ஒரு புது ஜீவன். பெய்லியர் ஆனால் நம் பங்களாவின் பின்புறக் காம்பவுண்டின் சுவர் ஓரமா ஒரு ஆறடிக் குழி ரெடியா இருக்கு.... அதுல....''

ஜன்னல் கம்பிகளைப் பிடித்தபடி கேட்டுக் கொண்டிருந்த கிருஷ்ணமூர்த்தியின் முழு உடம்பும் வலிப்பு வந்தாற் போல் பயத்தில் நடுங்கியது. மயிர்க் கால்கள் அத்தனையும் ஏககாலத்தில் சரேலென்று நிமிர — பேய்த்தனமாய்அடித்துக் கொள்கிற இதயத்தோடு சட்டென்று ஜன்னலிலிருந்து உதிர்ந்து பங்களாவின் பின் பக்கக் கதவை நோக்கிக் கண் மண் தெரியாமல் ஓட ஆரம்பித்தான்.

''**போ**யிட்டானா?''

சொப்னாவின் கணவர் கேட்க...

சொப்னா வயிற்றைத் தன் இரு கைகளாலும் பிடித்துக் கொண்டு சிரித்தாள்.

''போயிட்டானாவா... நல்லா கேட்டீங்க! பறந்துட்டான்.... ஓட்டம்னு ஓட்டம்..... அதுதான் ஓட்டம்...!''

சொப்னாவின் கணவர் சிரித்தார். ''அவனாலே மூணு இங்க் பாட்டில் வேஸ்ட்!'' ராட்சஸக் குடுவையில் இருந்த அந்த நீல நிறத் திரவத்தைக் காட்டிக் கொண்டே சொன்னார்.

ஒரு நச்சுப் பாம்பின் வாயிலிருந்து இரண்டாம் தடவையும் தப்பித்துவிட்ட மகிழ்ச்சியோடு மீண்டும் பலமாகச் சிரிக்க ஆரம்பித்தாள் சொப்னா.



காதலன்: திருமணத்திற்கு முன்பு நாம் ஒருவரை ஒருவர் நன்றாகப் புரிந்து கொள்வது நல்லது. இதனால் நமக்குள் அபிப்பிராய பேதங்களைத் தவிர்க்கலாம். சரி, உனக்கு கமல் நடிப்பு பிடிக்குமா? இல்லை ரஜினியா?

- கலாமூர்த்தி

# கூர்ந்த பதில்கள்!

○ என். எஸ். டி. ராஜன், திருவையாறு

கே: நடிக நடிகைகளின் பெயரால் நடத்தப்படும் மன்றங்களால் என்ன நன்மை?

ப: அந்தந்த சினிமா நட்சத்திரத்தின் இமேஜைக் காப்பாற்றவும் அவர்களின் பிராபல்யத்தை அதிகரிக்கவும் உதவுகின்றனவே! இது அந்த சினிமா நட்சத்திரங்களுக்கு நன்மைதானே? இத்தகைய சங்கங்களை ஆக்க ரீதியில் சமுதாயத்துக்கு உதவும்படியாகவும் பயன்படுத்திக் கொள்ள முடியும். தவறி விடுகிறார்கள். போட்டியும் பொறாமையும் அதன் விளைவான சண்டை பூசலும் தான் பெருகுகின்றன. துரதிர்ஷ்டமே.

○ நாகுவேலன், மதுரை 16

கே: கிண்டி சென்ற அனுபவம் உண்டா என்ற கேள்விக்குக் குதிரைப்பந்தயத்தைப் பற்றி பதில் எழுதியிருக்கிறீர்களே. கிண்டியில் வேறு எத்தனையோ இருக்க, ரேஸைப் பற்றி எழுதியது ஏன்?

ப: முன்பெல்லாம் சினிமாத் தியேட்டர்களில் யுத்தச் செய்திப் படங்கள் (வார் பிக்சர்) காட்டுவார்கள். யுத்தம் முடிந்த பிறகு அது நின்று விட்டது. இன்றும் ஏதாவது




செய்திப் படங்களைக் காட்டும்போது பலர் 'வார் பிக்சர்' இப்பத்தான் ஓடிக்கிட்டு இருக்கு' என்று சொல்வதைக் கேட்டிருப்பீர்கள். அது மாதிரிதான் கிண்டி என்றால் ரேஸ் என்பதைத்தான் குறிக்கும்.

○ டி. சௌந்திரராஜன் ஈரோடு

கே: 1900ல் வெளியான சாவித்திரி வரலாறு என்ற புத்தகத்தை இன்றும் பத்திரப்படுத்திப் படித்து வரும் என்னைப் பற்றி...?

ப: இத்தனை வருஷமாகவா சொந்தக்காரரிடம் புத்தகத்தைத் திருப்பிக் கொடுக்காமல் இருக்கிறீர்கள்! கடுக்கு அண்ணனாக இருப்பீர்கள் போலிருக்கிறது.

○ கே. வித்யா, தஞ்சை 7

கே: பட்டுக்கோட்டையில் தப்பியோடிய கைதியின் பெயர் கடுகு என்று தினத்தந்தியில் செய்தி வந்ததைப் பார்த்தீர்களா?

ப: நானும் ஒரு கைதிதான். ஆயிரக் கணக்கான — நோ, நோ — லட்சக் கணக்கான ரசிகர்களின் அன்புக் கைதி!

○ ஜி. கிரிஜா கணேசன், நெகமம்

கே: அறிவும் அதிர்ஷ்டமும் ஒன்றாக இருப்பதில்லையே, ஏன்?

ப: அப்படி யார் சொன்னது? பல அறிவாளிகள் அதிர்ஷ்டசாலிகளாகவும் இருக்கிறார்களே. மந்திரிகள், நீதிபதிகள், உயர் அதிகாரிகள் என்கிற பதவிகளை அடைந்




திருக்கிறார்களே. இப்படிப்பட்ட உயர் பதவிகள்—ஏன், சாதாரணப் பதவிகளையும் எடுத்துக் கொள்ளலாம் — கிடைக்காதவர்கள் தாங்கள் திறமைசாலிகள் என்றும் அதிர்ஷ்டம் இல்லாததால் அந்தப் பதவி கிடைக்கவில்லை என்றும் சமாதானம் சொல்வார்கள். இப்படி இவர்கள் சொல்வதால் அதிர்ஷ்டத்துக்கும் அறிவுக்கும் துளிக்கூட சம்பந்தமே இல்லை என்று கூறி விட முடியுமா?

○ கே. பிரதாப் சிங், அரகண்ட நல்லூர்

கே: நடைபாதைவாசிகளுக்குவிமோசனமேஇல்லையா?

ப: விமோசனம் ஏற்பட்டாலும் அந்த இடத்தில் வேறொரு நடைபாதை வாசி முளைத்துவிடுவதால் விமோசனம் ஏற்பட்டுக் கொண்டே இருந்தாலும் பிரச்னைக்கு விடிவு ஏற்படாதென்றே தோன்றுகிறது.

○ வி. எஸ். மாலதி, காட்பாடி

கே: சினிமா உலகம் மட்டும் தானா நேர்மையற்றது?

ப: இல்லையே. எந்தெந்த வியாபாரங்களில் ஏராளமான பணம் புழங்குகிறதோ, அவைகளில் நேர்மைக்கு முதலிடம் கிடையாது. ஆனால் சினிமா உலகின் கவர்ச்சி காரணமாய் அங்கு நடக்கும் சின்னத் தகறுகள் கூட பெரிய அளவில் விளம்பரம் பெற்று விடுகின்றன. (ஒரு சினிமாஉலக தில்லுமுல்லு: கமல் - ரதி —கே. பாலசந்தர் மூவர் சம்பந்தப்பட்ட இந்திப் படம் வெற்றி பெற்றிருக்கிறது. கமல் — ரதி நடித்து சி.வி. ராஜேந்திரனால் டைரக்ட் செய்யப்பட்ட 'உல்லாசப் பறவைகள்' இந்தியில் 'மீட்டி மீட்டி பாதேன்' என்ற பெயரில் டப் செய்யப்பட்டு இருக்கிறது. டைரக்ஷன் கே. பாலசந்திரா(!) என்று விளம்பரம் செய்கிறார்கள். இது எப்படி இருக்கு!)

பரிசு பெறுபவர் :

ஜி. கிரிஜா கணேசன்
26 ஆறுமுகபிள்ளை வீதி நெகமம் 642120

# சுத்தமோங்கும் ஆரோக்கிய சுகத்திற்கு...
# லைப்பாய் பர்ஸனல்



புதிய லைப்பாய் பர்ஸனல்—அழுக்கிலுள்ள
கிருமிகளைக் கழுவிக் களையும்
ஈடிணையற்ற லைப்பாய்
திறமைக்கு...மேலும் சிறப்பு:
சுத்தமயமான ஆரோக்கிய
சுகமளிக்கும் நுரை வளப்பம்,
சுறுசுறுப்புத் தரும் சுகந்தம்.
பொலிவு மிகுந்த மேலுறைப்
பேக்கிங்கிலே புதுமையழகு
வடிவ சோப். குளித்திடுவீர்...
குளித்திடப் புதுமை லைப்பாய்
பர்ஸனல்...நவீன
மனிதருக்கான நவீன சோப்.






## லைப்பாய் பர்ஸனல்

**சுறுசுறுப்பூட்டும் இதன் சுகமே அலாதி!**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு. லின்டாஸ்-LP. 10-1810 TM




கொசுக்களைத் தட்டி விரட்டிடும் டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்




கொசுக்களை விரட்டிட எளிய வழி டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்.




அசுரக கொசுக்களை அடித்து விரட்டிடும் டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்.

கொளுத்துவீர் டார்டாய்ஸ்-விரட்டுவீர் கொசுக்களை!

**டார்டாய்ஸ்** கொசு வர்த்திச் சுருளினால்.



தயாரிப்பாளர்:
பாம்பே கெமிகல்ஸ் ப்ரைவேட் லிமிடெட்
.:போர்ட், பம்பாய்-400 023. .:போன்: 273831



ரசிகமணி ரசித்த மணிகள் — மீ.ப.சோமு

# பேரறிவின் பேருண்மைகள்

இன்றைய விஞ்ஞான முன்னேற்றமானது நமக்கு எத்தனையோ பல அரிய உண்மைகளை அறிவுக்குப் பொருந்துகிற முறையில் தெளிவாக்கியிருக்கிறது. இந்த ஆராய்ச்சிகளிலே சுவையான ஒரு சிறப்பு என்னவென்றால், இன்றைய விஞ்ஞானம் நம் முன்னோர்கள் நமக்கு எடுத்துச் சொல்லியுள்ள பல பேருண்மைகளை உறுதிப்படுத்திவருகிறது.

ஆனால் நம்முடைய நிலை என்ன?

கலைக்குக் கலையாகவும், அறிவியலுக்கு அறிவியலாகவும் உள்ள அற்புதங்களை அழகழகான பாடல்களிலே பண்டைச் சான்றோர்கள் கூறிப் போனதை வெறும் வார்த்தைகளாகவே சொல்லிச் சொல்லி அந்த வார்த்தைகளுக்கு உள்ளே ஒளிவிடுகிற அரிய பொருளை அறிவுக் கண் கொண்டு பார்க்காமல் கண்களை மூடிக்கொண்டு விட்டோம்! இந்த அவல நிலையை ரசிகமணி சொல்லுகிற பாங்கைப் பார்ப்போம்:

''ஒதுங்கலான ஒரு ஊரில் யூனியன் பஞ்சாயத்துப் புதிதாய் ஏற்பட்டது. முதலாக வந்த பஞ்சாயத்துத் தலைவர் பொதுநலப் பிரியர். ஊரை எல்லா விதத்திலும் திருத்தமுறச் செய்ய வேண்டும் என்று ஆத்திரம் கொண்டார். தெருக்களில் எப்படியாவது விளக்குப் போட்டுவிட வேண்டும் என்று கருதி, லாந்தல்க் கல்லுகளும், கல்லுகளின் உச்சியில் கனத்த இரும்பினால் செய்த லாந்தல்ச் சட்டமும், லாந்தலின் உள்விளக்கு, சிமினி எல்லாம் தயார் செய்து விளக்குப் போட்டு விட்டார். வெளிச்சம் ஏற்பட்ட காரணத்தினால் பெண்டுகளும் பிள்ளைகளும் இரவில் ஊருக்குள் சௌகரியமாக நடமாட ஆரம்பித்தார்கள். கள்ளர் பயம் இல்லை.

இப்படியாக ஐந்து வருஷம் கழிந்தது. பஞ்சாயத்துத் தலைவர் வேறொருவர் புதிதாக வந்தார். அவருடைய நிர்வாகம் ஒரு வருஷம் நடந்தது. அந்த நிர்வாகத்தில் விளக்குப் போடக் கணக்கில் வகையில்லை என்று ஆய்விட்டது. மேலதிகாரிகள் வந்து லாந்தல், விளக்கு, சிமினி ஆகிய உறுப்புக்களை ஜில்லாத் தலைநகருக்குக் கொண்டு போய்விட்டார்கள். ஆகவே ஊருக்கு மிச்சம், லாந்தல் கல்லு, லாந்தல் சட்டம், இருட்டு இந்த மூன்றுந்தான் என்று ஏற்பட்டு விட்டது.

இப்படியாக இருபது வருஷம் கழிந்தது. லாந்தல் கல்லும் சட்டமும் மாத்திரம் நின்று வந்தன. அயலூர் ஒன்றுக்கும் போய் அறியாத பள்ளிப் பையன்கள் தெருக்களில் கல்லுகள் எதற்காக நிற்கின்றன என்பதைப் பற்றி ஆராய ஆரம்பித்தார்கள். மாடுகளைக் கட்ட என்று சிலர் சொன்னார்கள். ''அப்படியானால் ஒவ்வொரு வீட்டுக்கு முன்னும் கல் நட்டிருக்க வேண்டுமே? அப்படி இல்லாததால் கல் நட்டது மாடு கட்டுவதற்காக அல்ல. மேலும், தெருக் கோடியில் கொண்டு போய் யாராவது மாட்டைக் கட்டி வைப்பார்களா?'' என்றும் சொன்னார்கள். இப்படி எல்லாம் தர்க்கித்துக் கொண்டிருக்கும் போது, பெரிய பையன், அதாவது பன்னிரண்டு வயசுப் பையன் ஒருவன் வந்தான். அவன் சின்னப் பையன்களின் சந்தேகத்தையெல்லாம் தீர்த்து வைத்தான். எப்படி:

''ஒரு தடவை நம்முடைய ஊருக்கு விறகு வண்டி ஒன்று வந்தது. வண்டிக்காரன் மாட்டைக் கல்லில் கட்டிவிட்டு, கடைமுளை, கடையாணி, கொண்டுவந்த சாப்பாடு எல்லாவற்றையும் சாக்கில் சுற்றிக் கல்லின் மேல் உள்ள இரும்புச் சட்டத்தில் வைத்துவிட்டான். இந்த மாதிரி அயலூரிலிருந்து வண்டி வந்தால், மாட்டைக் கட்டவும், சாமான்களைப் பிள்ளைகளுக்கு எட்டாத உயரத்தில் வைத்துக் கொள்வதற்காகவும் நாட்டியது கல். 'சுமைதாங்கிக் கல் இருக்கிறதல்லவா? அது போல இதுவும் ஒரு தர்மம்'' என்று சொல்லித் தீர்த்தான். மற்றப் பையன்களும் ஒப்புக் கொண்டு விட்டார்கள். கண்டுபிடிக்க முடியாத ஒரு உண்மையைக் கண்டுவிட்டதாக எல்லோருக்கும் ரொம்ப எக்களிப்பு!

ஒரு பையனுக்காவது கல்லுக்கும் விளக்குக்கும் சம்பந்தம் உண்டென்றுஎண்ணத்தோன்றவில்லை.

லாந்தல்க் கல்லு பட்ட பாடுதான் நமது முன்னோர்கள் கண்டுவைத்துப் போன பெரிய உண்மைகள் பாடும்.

''ஒன்றாகக் காண்பதே காட்சி''

என்றார் ஒரு பெரியார்;

''ஒழிவற நிறைந்த
ஒருவ போற்றி''

என்றார் மற்றொரு பெரியார். உலகத்திலுள்ள பொருள்களை யெல்லாம் ஏதோ ஒரு விதத்தில் ஆராய்ந்து, பொருள்கள் தோற்றத்தில் எவ்வளவு வேறுபட்டனவாய் இருந்தாலும் உண்

மையில் ஒரு பொருள்தான். பேதமில்லாத பொருள் என்று கண்டுவிட்டார்கள். மேலும், அந்தப் பொருள் எங்கும் வியாபித்துள்ளது. வான வெளியில் எவ்வளவு தூரம் எப்படிப் போனாலும் வெற்றிடம் என்பது இல்லாதபடி நிறைந்துள்ளது; நுணுகி நுணுகிப் போனாலும் அணுவென்றும், அணுவுக்குள் அணுவென்றும், இறுதியில்லாதபடி செறிந்து கொண்டே போகும் தன்மையது அந்தப் பொருள், என்றும் கண்டார்கள். ஒழிவு—அதாவது வெற்றிடம் அற — இல்லாதபடி, எங்கும் நிறைந்துள்ள வஸ்து கடவுள்—தத்துவம் என்றார்கள்.

''ஒழிவற நிறைந்த
ஒருவ போற்றி''

எவ்வளவு எளிமையோடும் தெளிவோடும் விஷயத்தை விளக்குகிறது வாக்கியம்!

மேல் நாட்டுக் கலை வல்லாரும் பல கருவிகளைக் கொண்டு ஆராய்ந்து இதே முடிவுக்கு இப்போது வந்திருக்கிறார்கள். நம்மவர்களோ அந்தக் கருவிகளின் துணையில்லாமலே ஆயிரக் கணக்கான வருஷங்களுக்கு முன்னமேயே இந்த உண்மையைக் கண்டு சந்தேகத்துக்கு இடமில்லாமல் கல்லில் எழுதி வைத்த மாதிரிச் சொல்லிவிட்டார்கள்.

உண்மைகள் கண்ணால் காணக் கூடியவையல்ல; கைகளால் பற்றி எடுக்கக் கூடியவையல்ல; உள்ளத்தில் நிற்பன. ஆகவே அவைகள் மறைந்து போய்விடுவதற்கும் காரணம் உண்டு; மறைந்தும் போய் விட்டன. பெரியோர்கள் சொல்லி வந்த விஷயங்களைப் புறக்கணித்துவிட்டு, வெறும் வார்த்தைகளையே சொல்லி வந்தார்கள் பிற்காலத்தவர்! பெரியவர்கள் பாடிய பாடல்களை அப்படியே பாடிக் கொண்டிருந்தால் போதும் என்று ஏற்பட்டு விட்டது. திருவாசகத்துக்கு உரை சொல்லக் கூடாது என்று சொல்லுவார்கள். பாராயணம் போதும், பொருள் தெரிய வேண்டியதில்லை என்று ஏற்பட்டு விட்டது. தெய்வப் பாடல் என்று சொல்லும் பாடல்களுக்குப் பின்னால், உண்மையனுபவமும் உணர்ச்சியும் இருக்கின்றன என்ற கொள்கை போய்விட்டது. உள்ளேயிருந்து என்றும் மங்காத பேரொளி வீசிக் கொண்டிருக்கிறது என்பதெல்லாம் கதையாய் முடிந்தது. விளக்கில்லை, வெளிச்சம் இல்லை, லாந்தல் கல்லும், சட்டமும் நிற்கிறது என்று ஆகிவிட்டது!''

இவ்வாறு எழுதுகிறார் டி.கே.சி! காரணம், அவர் எதையும் 'ராஷனல்' (Rational) என்று சொல்லுகிறோமே, அப்படி அறிவுக்குப் பொருந்துகிற முறையிலேதான் பார்ப்பார்; பிறரையும் பார்க்கும்படி செய்வார். எத்தனை நுட்பமான தத்துவங்களையும் ஒரு விஞ்ஞானியின் கண் கொண்டு பார்த்து நமக்கும் காட்டுவார். அவருடைய காவிய விளக்கங்களுக்கும், மற்றப் புலவர்களுடைய பதவுரை விளக்கங்களுக்கும் உள்ள அடிப்படையான வேறுபாடு இது!

ரசிகமணி அடிக்கடி ஓர் ஆங்கில மேற்கோளை எடுத்துச் சொல்லுவார்! The living faith of the Dead has become the dead faith of the Living என்று ஓங்கி அடிப்பார். இறந்தவரின் உயிருள்ள நம்பிக்கை, உயிருள்ளவரின் இறந்த நம்பிக்கையாகி விட்டது என்ற அந்த வாக்கியத்தைச் சொல்லி, உண்மைகள் எப்படி வெறும் மூடச் சடங்குகளாகப் போய் விட்டன என்று வெகுண்டு பேசுவார்!

உருவகமாகச் சொல்லப்பட்ட பல பழைய கதைகளையும், தத்துவங்களை உள்ளடக்கிய பல அருமையான சடங்குகளையும் அவர் விளக்கிச் சொல்கிற முறையே ஒப்பற்றது! அவருடைய கம்ப ராமாயணப் பதிப்பில் சில நிகழ்ச்சிகளுக்கும் சில நம்பிக்கைகளுக்கும் சமய உண்மைகளுக்கும் அவர் அடிக் குறிப்பிலே விளக்கம் எழுதியிருக்கிறார். அவற்றைப் படித்தால் காவிய நோக்குக்குள் எப்படி ஒரு விஞ்ஞான நோக்கு இணைந்து இயங்குகிறது என்பதைத் தெளிவாகவே கண்டு கொள்ளலாம்!

**யார்?**

தரையில் விழுந்து வணங்கும் பெண்மணி யார் தெரிகிறதா? 52ம் பக்கம் பார்க்க.



# 3 மாதத்திற்குப் போதுமான இரும்புச்சத்துடன் குழந்தை பிறக்கிறது



## 3 மாதம் ஆனபின், குழந்தைக்குத் தேவையான இரும்புச்சத்து பாலில் மட்டுமே கிடைப்பதில்லை.

## இரும்புச்சத்து அதிகமுள்ள ஃபாரெக்ஸ் கொடுங்கள்

"தாயிடமிருந்து ஏராளமான இரும்புச் சத்தைப் பெற்று குழந்தை பிறக்கிறது. பிறந்த பிறகு மெல்லமெல்ல இரும்புச் சத்தின் அளவுக் குறையத் தொடங்குகிறது. பால் நல்ல உணவாயிருப்பினும் இரும்புச் சத்துப் பற்றாக் குறையினால் அது முழுமையாவதில்லை. ஆகவே, குழந்தைக்கு இரும்புச் சத்து அடங்கிய திட உணவுத் தேவைப் படுகிறது."

—Dr. Subhash C. Arya "Infant & Childcare for the Indian mother"

**டாக்டர்கள் ஃபாரெக்ஸ் சிபாரிசு செய்யக் காரணம்?**

குழந்தைக்கு திட உணவைத் துவங்குவதற்கு தனிப்படத் தயாரிக்கப் பட்டது ஃபாரெக்ஸ்—குழந்தையின் இளம் ஜீரண சக்திக்கு ஏற்ப பக்குவம் செய்யப்பட்டது. இதில் விரைந்த வளர்ச்சிக்கான புரதச் சத்து; சக்திக்கான கார்போஹைட்ரேட், கொழுப்பு; எலும்புகளை திடமுடனும் பற்களை பலமுடனும் வளரச் செய்திடப் போதுமான கால்ஷியம், பாஸ்பரஸ், வைட்டமின்கள் உள்ளன. குழந்தையின் இரத்தத்திற்கும் உடல் ஆரோக்கியத்திற்கும் வளர்ச்சிக்கும், முன்னேற்றத் திற்கும் அவசியமான இரும்புச் சத்தும் ஏராளமாக அடங்கியது—ஃபாரெக்ஸ்.






**டாக்டர்கள் சிபாரிசு செய்வது ஃபாரெக்ஸ்**
**குழந்தையின் விரைந்த முழுவளர்ச்சிக்கு உன்னதமான திட உணவு**

CASGLF-30-203 TAM

# எதையும் வழங்கும் எஸ்.குமார்ஸ் சிறப்பின் சிகரம்!



எஸ்.குமார்ஸ் துணிகளின் அணிவகுப்பு...உங்களுக்கெனவே உருவான தனிப்படைப்பு. எஸ்.குமார்ஸ் ப்ளெயின் ஸூட்டிங்குகள்...வானவில்லின் வண்ணக் குவியல். டெக்ஸ்டைல்ஸ், நெசவுகள்—மொத்தத்தில் அழகான ஃபினிஷ் அடுக்கடுக்கான படைப்பு... அத்தனையும் உங்களுக்கே!

எஸ்.குமார்ஸ் ஃபேன்ஸீஸ்—விதவிதமான தொழில் உத்தி மூலம் விநோதமான கற்பனைகளின் எழில் வடிவம் ஃபேன்ஸி நெசவு. ஃபேன்ஸி டிசைன். எல்லாமே ஃபேன்ஸி மயம். தேர்ந்தெடுக்க வகை வகையான சீர் வரிசை. செலவிடும் பணத்திற்கேற்ற சிறப்பு. எஸ்.குமார்ஸ் ஃபேன்ஸீஸ்—உருவாகும் ஒவ்வொரு நிலையிலும் சீரிய கவனம்...சிறப்பான சிக்கனம். இன்னொரு முறை எஸ்.குமார்ஸ் புரிந்து விட்ட சாதனை—அதி உன்னத தரம்...மிகக் குறைந்த விலை.

எனவேதான் எங்கள் விற்பனையாளரிடமிருந்து துணி வாங்கும்போது, ஒவ்வொரு மீட்டரிலும் உயர்ந்த தரத்தைப் பெறுகிறீர்கள்—நயமான விலையில்!





'டெரீன்' மற்றும்
பாலிஅக்ரான்.
ஸூட்டிங், ஷர்ட்டிங்,
புடவைகள்.

**S.Kumars®**

'நிரஞ்ஜன்' 99, மரீன் ட்ரைவ், பம்பாய் 400 002

## மிகக் குறைந்த விலையில், அதி உன்னத தரம்...



Sista's-SK-164/81 Tam

# போர்ஹென்ஸ்–பல் டாக்டரால் உருவாக்கப்பட்ட டூத்பேஸ்ட்






## உங்கள் பற்களை சுத்தம் செய்யும்,போதே ஈறுகளையும் வலுப்படுத்த உதவுகிறது

**ஈறு உபாதையால் ஆரோக்கியமான பற்களைக்கூட இழக்க நேரிடும்**



பல் டாக்டர்கள் கூறுகிறார்கள், உங்கள் பற்களை சரிவர சுத்தம் செய்யவில்லையெனில் பற்களையும் ஈறுகளையும் சுற்றி, மெல்லிய கிருமிகளின் படிவமாகிய ஊத்தை (Plaque) தோன்றுகிறது. இதுவே காலடைவில் பற்காரையாக மாறி, ஈறுகளை பலவீனப்படுத்தி, அவற்றைத் தளருவதால் ஆரோக்கியமான பற்களும் விழுந்து விடக்கூடும். ஈறுகெட்டால் உடல் நலமே கெடும்.




**ஈறுகளுக்கு போர்ஹென்ஸ் பாதுகாப்பு**



டாக்டர் போர்ஹென்ஸினுடைய ஃபார்முலாவின் விசேட (அஸ்ட்ரிஞ்ஜென்ட்) சேர்க்கைப் பொருள் உங்கள் ஈறுகளை வலுப் படுத்தி ஈறு உபாதைகளைத் தடுக்க உதவுகிறது. ஆகவே, போர்ஹென்ஸ் டூத் பேஸ்ட், போர்ஹென்ஸ் டபிள் ஆக்ஷன் டூத்பிரஷ் கொண்டு பற்களைத் துலக்குங்கள். ஈறுகளைத் தேய்த்துக் கொடுங்கள்

**போர்ஹென்ஸ்** —ஈறுகளுக்கெனவே

351 F-203 TAM

Regd. T.M. Geoffrey Manners & Co. Ltd.

# ஆமென்

வின்ஸ்டன் ஜி. கிருபாகரன்

'பரலோகத்திலிருக்கிற எங்கள் பிதாவே' என்று ஆரம்பித்து 'ஆமென்' என்று வேக வேகமாக முடித்தார் ஐயரவர்கள்.

குழுமியிருந்தவர்களுக்கு மூச்சு வாங்கியது.

மாலையில் மத மாற்றச் சடங்கு இருந்தது. திருமுழுக்கு ஆராதனை. 'இதை' முடித்துக் கொண்டு அதற்கு சேர்மன் ப்ரிபேர் பண்ண வேண்டும். நேரமில்லை. யாரோ பணம் படைத்த வெள்ளைக்கார மாது பத்து வயதுக் குட்பட்ட பத்துப் பேரைத் தத்து எடுத்திருந்தார். கிறிஸ்துவ வளர்ப்பில் வளர வேண்டுமாம். வருடம் ஒரு முறை இங்கிலாந்தில் விசிட் எண்டாம்.

பாதிக்குப் பாதி வேறு மதத்தினரைப் பொறுக்கியிருந்தார்கள்.

உண்டி சுருங்கிய சராசரி இந்தியனுக்கு ஒரு வரப்பிரசாதம். விடுவார்களா? சமுதாய, பொருளாதார ஏற்றத் தாழ்வுகள் இல்லாத ஒரே ஒரு இடத்தை இந்திய வரைபடத்தில் வட்டமிட்டுக் காட்ட முடியுமா எவராலும்? "என் புள்ளே ஏரோப்ளேன்லே பறக்கப் போறான்" — போதாதா காரணம்? அதுதான் மதமாற்றம்.!

பத்தாது என்று சிலர் அதை அரசியலாக்குவார்கள். அலறியடித்துக் கொண்டு ஆட்சியில் உள்ளவர்கள் அதையும் இதையும் அப்பகுதி மக்களுக்கு வாரி வழங்குவார்கள். எவன் வீட்டு வரிப் பணமோ? ஏக ஜாலிதான்!

இங்கிருந்து அங்கே; அங்கிருந்து இங்கே எல்லாம், எல்லா சமயத்தினருக்கும் பொது அம்சம். முடிவில்லாத தொடர் கதை.

ஐயரவர்களுக்கும் இந்த ஸ்டாடிஸ்டிக்ஸ் ரொம்ப ரொம்பத் தேவைப்பட்டது. இதைக் காட்டி மைலார்டு பிஷப்பிடம் நல்ல பெயர் எடுக்கலாம். மஃப்பஸலிலிருந்து 'சிடி'க்குடிரான்ஸ்பர் வாங்கலாம். சம்பளம் கூட வரும்.

சவப் பெட்டியில் டி.சி.டி.ஓ. எட்வர்டு தூங்கிக் கொண்டிருந்தார். துக்கத்தின் அடையாளமாகத் தெரிந்தவர்கள் வரும்போது மட்டும் மூக்கை உறிஞ்சி முழுங்கினாள் அவரது மனைவி விக்டோரியா.

அப்போதுதான் அந்தத் தந்தி வந்தது.— உள்ளூர். யாரோ கையெழுத்திட்டுப் பெற்று அந்த அம்மாளிடம் தந்தார்கள்.

May God bless you with ever lasting Life for your Historical efforts When is your funeral -John

விக்டோரியா அம்மையாருக்கு ஷாக்.

மகன் அடித்திருந்தான்.

"ரோக்" — உரக்கவே கத்தினாள். கை கழுவி விட்டதற்கான முத்திரை. கசக்கி எறியப்பட்ட கலர்க் காகிதத்தைக் கையிலெடுத்துப் பிரித்தார் ஐயரவர்கள்.

அவருக்கும் ஷாக். "ஜான்... ஏன்?"



'ஜில் எட்வர்டு' என்று அவருக்குப்பெயர். வணிகத் துறையில் அதிகாரி. டி.சி.டி.ஓ. மன்னன். நிபுணன். அஸெஸ்மெண்ட்ஆர்டர் போட்டாரென்றால் அப்பீலே கிடையாது. நோண்டி விடுவார் நோண்டி!

அந்த ஊருக்கு வந்து இரண்டு மாதங்கள் கூட நிறைவு பெற்றிருக்கவில்லை. மனைவி விக்டோரியாவுக்குச் சமூக சேவையில் அதிக ஈடுபாடு. கிராமம் கிராமமாகச் சுற்றிக் கொண்டிருப்பாள். அசோஸியேஷன்கள் ஆரம்பிப்பாள். பத்திரிகைகளுக்கு நியூஸ் கொடுப்பாள். தன் பெயர் அச்சில் ஏறிவிட்டால் மட்டுமே அதை வெட்டி எடுத்து ஆல்பத்தில் ஒட்டுவாள். பப்ளிசிடி மாங்கர். விளம்பரப் பிரியை. சமூக சேவை யெல்லாம் அதற்காகத் தான்!

ஆயிரத்துக்கு மேல் கணவருக்கு வருமானம். பூர்வீக சொத்து பாகம் என்று வாடகைப் பணமும், நெல்லும் வரும். குடும்பத்தில் இருந்தது மூவர் மட்டுமே. இருப்பினும் சேவிங்ஸ் என்று காலணா கிடையாது.

சமூக சேவை!

'எப்படியோ நாலு பேருக்கு உதவி கிடைச்சால் சரி. கடனில்லாமல் இருந்தால் போதும்' என்று அதைப் பெரிது படுத்தாமல் விட்டிருந்தார் எட்வர்டு. மனைவியின் முன்கோப புத்தியை அறிந்தவர் அவர். பையன் வேறு தோளுக்கு மேல் நின்றான். அவன் கண் முன் ரசாபாசம் நிகழ்வதைத் தவிர்த்தார்.

மகன் ஜானுக்கு வோட்டுரிமை வயது. பி.காம் பட்டதாரி. ரொம்ப சென்ஸிடிவ் ஆசாமி.

—''வாட்ச் என்னப்பா, ஃபாரீனா?''

—''இல்லே. ஹெச். எம். டி.''

—''உனக்கென்னப்பா டி.சி.டி.ஓ. பிள்ளை. கிம்பளத்துக்குக் குறை இருக்காது. ஃபாரீனுக்கே ஒரு ட்ரிப் அடிச்சாற மாட்டே....!''

---

அவர்: ''பத்திரிகை ஆசிரியரா இருந்துக்கிட்டு எனக்கு ஞாபக மறதி அதிகம்னு ஒரு பேட்டியில் சொன்னது தப்பாப்போச்சு!''

இவர் : ''ஏங்க...?''

அவர் : ''ஏற்கனவே வெளியான ஜோக்ஸ்க்ள் பலவற்றை நிறையப்பேர் எழுதி அனுப்ப ஆரம்பிச்சிட்டாங்க என் பத்திரிகைக்கு!''

- உ. ராஜாஜி



எடுத்ததற்கெல்லாம் அப்பாவை இழுத்தார்கள் கல்லூரியில். அதிகாரத்தில் இருப்பவர்கள் எல்லாம் துஷ்பிரயோகம் செய்கிறார்களா என்ன? அப்பா நெருப்பு. அவருக்கா இந்தப் பெயர்? சின்னப் புத்திப் பயல்கள். இந்த சர்க்கிளே அழுகல். நோ மோர் ஸ்டூடண்ட் லைஃப் என்று முடிவெடுத்தான். மேல் படிப்பு கட்.

வேலை தேடிக் கொண்டிருந்தான்.

அன்று பாருங்களேன்.

அந்த ஊரில் எட்வர்டு சார் சார்ஜ் எடுத்து இரண்டாம் நாள். மசலைக் குடித்த மயக்கம் தீர வீட்டு வாசலில் கார் நின்றது.

வந்தவர் வாயெல்லாம் பல்லாக, விரலெல்லாம் தங்கமாக, ''ஐ ஆம் ராஜேந்திரன்—எண்டர்பிரைஸஸ் ஓனர். பார்த்திட்டுப் போகலாம்னு வந்தேன்'' என்றார்.

''உங்களை எனக்குத் தெரியாதே!''

''அதில்லே சார். புது ஆபீசரைக் கண்டுக்கிட்டுப் போறது வழக்கம்தானே'' என்றவாறு எலுமிச்சை ஒன்றைப் பவ்யமாக நீட்டினார் அவர்.

எழுந்து பெற்றுக் கொண்டவர், ''தப்பில்லே, தாங்க்ஸ். உட்காருங்க'' என்றார்.

'தப்பில்லே என்கிறாரே. எட்வர்டு சார் தானா இவர், நெருப்பு என்றார்களே... ம்! தேவை வந்துவிட்டிருக்குமோ...' என்று நினைத்தவருக்குத் தைரியம் வந்து விட்டது. உள் பாக்கெட்டிலிருந்து அதை எடுத்து நீட்டினார். — கவர்!

''பட், தேர் இஸ் எ லிமிட். மனுஷனை மனுஷன் மரியாதைக்காகப் பார்க்கிறதிலோ ஒரு எலுமிச்சம் பழத்தை டோக்கனுக் கொடுக்கிறதிலோ வாங்கிக்கிறதிலோ தப்பில்லே தான். ஆனா, உங்க அடுத்த டோக்கனை வாங்கறதும் அஃபன்ஸ், கொடுக்கிறதும் அஃபன்ஸ்.''

''தவறா நினைச்சுக்காதீங்க சார். ஊருக்குப் புதுசா வந்திருக்கிறதாலே கைக்காவலா இருக்கட்டுமேன்னுதான்....'' கையை இழுத்துக் கொண்டார்.

''டோண்ட் பாதர். அரசாங்கத்திலே பே அட்வான்ஸ் தர்றாங்க.''

வந்தவருக்கு அசடு வழிந்தது. பேச்சை மாற்றினார். ''உங்களுக்கு ஒரு பையன் இருக்காராமே...''

''என் ஃபேமலியைப் பத்தி நல்லாவே தெரிஞ்சு வச்சிருக்கீங்களே!''

''அதாவது சார்... அவுட் ஆஃப் இன்டரஸ்ட். பி.காம் படிச்சிட்டு வேலை இல்லாம இருக்கிறதாக் கேள்விப்பட்டேன். நம்ம குரூப்ஸ்லே ஒரு அக்கௌண்டண்ட் வேலை காலியா யிருக்கு... 750 ப்ளஸ் அலவன்ஸ்... அனுப்புங்களேன். ஒரு பிரச்னை தீரும்.''

எட்வர்டு சார் எழுந்தார். அப்போது தான் அப்பாவின் மேல் ஜானுக்கு இருந்த பெரு மதிப்புப் பன்மடங்காகப் பெருகியது. அவர் சொன்னார்:

''இன்னொரு பிரச்னை உடனே கிளம்பும். நீங்க என் அஸெஸ்மெண்ட் சர்க்கிள்ளே இருக்கீங்க! நீங்க ஃபேவரை எதிர்பார்க்கா விட்டாலும் நாலுபேர் நாலு விதமாப் பேசுவாங்க...

என் மகன் பையன் இல்லே... ஹி இஸ் எ குரோன் அப் ஜென்டில்மேன். ஐ க்யூ ஜாஸ்தி. அவனுடைய இன்டெலிஜென்ஸுக்கு இன்னொருத்தர் ரெகமெண்டேஷன் இல்லாம நிச்சயமா ஒரு வேலை கிடைக்கும். பாங்கிலே முயற்சி பண்றான்... கிடைச்சுடும்... ஆபீஸிலே சந்திக்கலாமா?''

வந்தவர் என்னவோ மாதிரி சிரித்துவிட்டு விடைபெற்றுக் கொண்டார்.

அப்பாவைக் கட்டிப் பிடித்து முத்தம் கொடுக்க வேண்டும் போலிருந்தது ஜானுக்கு.

தந்தைக்கும் மகனுக்கு மிடையே உறவு இவ்வாறிருக்க, தாய்க்கும் மகனுக்கும் ஒத்துப் போவதேயில்லை.

அன்று...

எட்வர்டு சாருக்கு உடல்நிலை சரியில்லை. இரைப்பு வாங்கியது. பி.பி. இருந்தது. கூடவே நெஞ்சு வலி. டாக்டர் ஈ.ஸி.ஜி. என்றார், எக்ஸ்ரே என்றார். ''பி கோர்ஃபுல் டேக் கம்ப்ளீட் ரெஸ்ட்'' என்றார். இதய நோய்க்கான அறிகுறி.

விக்டோரியா அம்மாள் டொனேஷன் ரசீதுகளும் கையுமாக நாயாய் அலைந்து கொண்டிருந்தாள். கோவிலை ஒட்டி பாரிஷ் ஹால் கட்ட வேண்டுமாம். திருமுழுக்கு ஆராதனைக்குள் இன்னும் பத்தாயிரத்துக்கு மேல் வசூல் பண்ண வேண்டியிருந்தது.

அன்று மாலைதான் அந்த மதமாற்றச் சடங்கு.

மைலார்டு பிஷப் வரவிருந்தார். இடத்தை அநுக்கிரகம் செய்துவிட்டுப் போவார். பண முடிப்பைக் கொடுத்துப் பெருமையடித்துக் கொள்ளவேண்டும் விக்டோரியா அம்மாளுக்கு.

பை பெருக்கக் காணோம்.

அப்போதுதான் ஐயரம்மாள் அந்த ஐடியா கொடுத்தாள். அதன் தொடர்பாகப் பேசி முடிக்க விருவிருவென்று அறைக்குள் அம்மையார் நுழைய...

எட்வர்டு சார் கண் மூடிப் படுத்திருந்தார். அருகில், ஜான், அவரது வலது கை விரல்களைத் தனதில் கோத்துக் கொண்டு அமைதியாக அமர்ந்திருந்தான். வாய் முணு முணுத்தது.

''நத்திங் டு வொர்ரி டாட். யூ வில் பி ஆல் ரைட்.''

உள் நுழைந்த விக்டோரியா அம்மையார் படபடத்தார்கள். ''ஏம்பா... எழுந்திருங்க... உங்களாலே ஒரு வேலை ஆகணும்.''

''ஷ்'' என்றான் ஜான். ''அப்பா தூங்கறாங்க... ஸ்ட்ரோக் மாதிரி இருக்கு. அதிகமா வேர்க்குது... மாத்திரை எங்கே வச்சீங்க?''

''தேடிப் பார்க்கிறதுதானேடா...''

''பார்த்தேன். கிடைக்கலே....''

''வேறே வாங்கிக்கலாம். இப்போ எழுப்பு... பாரிஷ் ஹாலுக்கு டொனேஷன் கலெக்ட் பண்ணணும்டா சாயந்திரத்துக்குள்ளே கொறைஞ்சது பத்தாயிரம் பிரிக்கணும்.''

''அதுக்கு அப்பா என்ன செய்ய முடியும்?''

''தகப்பனும் பிள்ளையும் ஏன் இப்படி இருக்கீங்க... கோவிலுக்கு உற்சாகமா ஊழியம் செய்யணும்டா... இப்படி எதிலேயும் கலந்துக்காம... ம்?... உங்கப்பாவைப் பார். பெரிய டி.சி.டி.ஓ. ஐயரம்மா சொல்லித்தான் எனக்கும் தெரிஞ்சுது. ஊரிலே இருக்கிற அத்தனை கடைகளிலேயும் ஏறி இறங்கிடு. நிமிஷத்துலே பத்தாயிரம் மேலே டொனேஷன் குவிஞ்சுடுமாமே... டாக்டரம்மா கார் கொடுத்து அனுப்பியிருக்காங்க.. எழுப்பு... போகணும்... எப்பா... எப்பா''

எரிச்சல் பீறிக் கொண்டுவந்தது ஜானுக்கு.

''அவரை எழுப்ப மாட்டேன். நீங்க செய்யறது தப்பு. மனப்பூர்வமாக் கொடுக்கிற நன்கொடைகள் தான் கடவுளுக்குப் பிரியமானது. ஆபீசர் வந்துட்டார்ங்கற கட்டாயத்திலே கொடுக்கிறதெல்லாம் செல்லாக் காசுதான். அப்பாவுக்கு இந்த வேலை யெல்லாம் பிடிக்காது. இட் இஸ் அகெய்ன்ஸ்ட் ஹிஸ் பாலிஸி; பிரின்ஸிபிள்ஸ்...''

''ஷட் அப்.... நீ நரகத்துக்குத்தான்டா போவே!''—அம்மா குறுக்கிட்டுச் சபித்தாள்.

''பெட்டர் ப்ளேஸ், தேன். ஹியர்!''

''பெட்டர் பிளேஸா... டாமிட்... நான் திரும்பி வர்றபோது நீ இந்த வீட்டில இருக்கக் கூடாது. இன்னையோட கைகழுவிட்டேன்'' — சீறினாள். படபடவென்று படுத்திருந்தவரின் கன்னங்களைத் தட்டி ''எப்பா.. எப்பா... எழுந்திருங்க... வேலை இருக்கு'' என்று துரிதப்படுத்தினாள்.

ஜானுக்குப் பொறுக்கவில்லை. தன் இடது கையால் அம்மாவின் வலது முழங் கையைப் பிடித்து இழுத்தான். ''அம்மா... டோன்ட் யூ ஹெவ் சென்ஸ்... ஹி இஸ் சிக்'' என்று முறைத்தான்.

பளாரென ஒரு அறை விழுந்தது. ''நிறுத்துடா. எல்லாம் எனக்குத் தெரியும்'' என்றவள், கணவனை நோக்கினாள்.

சோர்வுற்ற கண்கள் திறந்திருந்தன. எட்வர்டு சார் தம் மகனையே பார்த்துக்கொண்டிருந்தார். பிடியை விடவில்லை.




''மானேஜர் ஏன் நொண்டி நொண்டி நடக்கிறாரு?''

''தொடையிலே வலியாம்!''

''அடப்பாவமே! விழுந்துட்டாரா? எங்கே? எப்போ?''

''அதெல்லாம் ஒண்ணுமில்லே, புதுசா வந்திருக்கிற லேடி ஸ்டெனோ ரொம்பக் குண்டு!''

– எஸ் பாலகிருஷ்ணன்

# ஜலதோஷமும் ஃப்ளூவும்— சில முக்கிய தகவல்களும் முறியடிக்கும் முறைகளும்

"ஜலதோஷம் மற்றும் ஃப்ளூவின் துன்பங்களிலிருந்து விரைவில் நிவாரணம் பெற அனாஸின் பெரிதும் உதவுகிறது" என்கிறார் நர்ஸ் நாட்டாலியா டிசௌஸா.



**ஜலதோஷமும் ஃப்ளூவும் வரக் காரணம் என்ன?**

பாதிக்கப்பட்டவர்களிடமிருந்து காற்றில் வரும் விஷ அணுக்கள் ஜலதோஷத்தையும் ஃப்ளூவையும் பரப்புகின்றன. இந்த விஷ அணுக்களை சாதாரணமாக உடல் எதிர்க்கிறது. ஆனால் அளவுக்கு மீறிய உழைப்போ, சத்துக்குறைவோ உடலைப் பலவீனப் படுத்தி, நோய் எதிர்ப்பாற்றலைக் குறைக்கிறது.

**அறிகுறிகள் யாவை?**

உடல் வலி, தலைக்கனம், தும்மல், மூக்கிலே ஒழுக்கு இவற்றுடன் ஜலதோஷம் தொடங்கும். குளிர், அமைதியின்மை, வியர்வை தோன்றும். இருமல், தொண்டைப் புண், பசியின்மை, உடல் சோர்வு தொடரலாம்.

**சிக்கல்கள் தோன்றுமா?**

புறக்கணித்தால் நிமோனியாவிலும், சுவாசகோசம் மற்றும் மேல் மூச்சுக் குழாயின் நோய்த் தொற்றிலும் முடியலாம்.

**அனாஸின் எப்படி உதவுகிறது?**

இது ஜலதோஷம், ஃப்ளூவினால் ஏற்படும் வேதனையைப் போக்குகிறது. உலகெங்கும் டாக்டர்கள் சிபாரிசு செய்யும் வலி-நிவாரணியை அதிக அளவில் கொண்ட அனாஸின் சக்தி வாய்ந்தது. டாக்டரின் நம்பகமான மருந்துக் கலவை போன்றது. ஜலதோஷம் ஃப்ளூவின் முதல் அறிகுறி தோன்றியதுமே, அனாஸின் சாப்பிடுங்கள், ஒரு நாளைக்கு 4 தடவை.

**நீங்கள் வேறென்ன செய்யவேண்டும்?**

- நிறைய திரவ பதார்த்தங்கள், கொதிக்க வைத்த நீர், ஆரஞ்சு அல்லது எலுமிச்சை சாறு பருகுங்கள்.
- சத்துணவு புசியுங்கள்.
- போதிய ஓய்வெடுங்கள்.
- ஆன்டிசெப்டிக் மருந்து அல்லது உப்புக் கரைத்த நீரால் கொப்புளியுங்கள்.
- அறைகள் காற்றோட்டமாக இருக்கட்டும்.



சக்தி வாய்ந்த, நம்பகமான

மேனர்ஸ்

அனாஸின்*

இந்தியாவின் புகழ்பெற்ற வலி-நிவாரணி

அளிப்பவர்கள்: ஜெஃப்ரி மேனர்ஸின் அனாஸின் பிரிவினர்.

* Regd. T

A24-6/79.

''எழுந்திருங்கப்பா .... போகணும்.... போகச்சே விஷயத்தைச் சொல்றேன்'' என்ற மனைவியைப் பார்த்து இடதும் வலதுமாகத் தலையை ஆட்டினர்.

''வரமாட்டேங்கறீங்களா?'' — கோபக் குரல்.

அசே அசைவு.

விக்டோரியா அம்மாவுக்கு எரிச்சலும் ஆத்திரமும் கொப்பளித்து எழுந்தன. ''ஓகோ ரெண்டு பேரும் சேர்ந்து என்னை அவமானப் படுத்தறீங்களா.. நான் நினைச்ச காரியத்தைச் செய்தே முடிப்பேன். உங்க ஆபீஸ் சிப் பந்தியை அழைச்சுக்கிட்டுக் கடை கடையாகப் போகப் போறேனா இல்லையா பாருங்க!'' விறிட்டாள். ''டவாலி சேவகனைப் பார்த்தாலே நான் யார்னு புரிஞ்சுக்கு வாங்க. சுலபமா கலெக்ஷன் ஆயிடும்!''

''அம்மா... ப்ளீஸ் டோண்ட் டூ இட்'' என்றான் ஜான்.

''நீ பேசாதேடா ராஸ்கல். இது ப்ரெஸ் டிஜ் சமாசாரம். உன்னைக் கைகழுவிட்டேன். ரோஷமானவனா யிருந்தா இந்த வீட்டை விட்டு வெளியே போ'' என்று கத்திவிட்டு, கோபமாக வெளியேறினாள் அந்தச் சமூக சேவகி. அப்பப்பா! ஒரு நல்ல காரியம் பண்ண எத்தனை தடங்கல் என்று வாய் முணு முணுத்தது!

அம்மா போன சுவட்டைச் சற்று நேரம் வெறுப்புடன் பார்த்துக் கொண்டிருந்த ஜான், அப்பாவின் பக்கம் பார்வையைத் திருப்பினான்.

எட்வர்டு சாரின் இமைகள் மூடியிருந் தன. கண்களின் ஓரத்திலிருந்து காதுக் குழி வரை நீரோட்டத்தின் சுவடுகள்...

அழுதாரா என்ன?

ஜானின் வாய் ஆதுர்யமாய் முணு முணுத் தது.

''நத்திங்டு வொர்ரி டாட்... யூ வில் பி ஆல்ரைட்...''

ஆயிரம் தடவை சொல்லியிருப்பான். அசை வைத்தான் காணோம்....

பல மணி நேரத்துக்குப் பின் மதிய உண வுக்கு விக்டோரியா அம்மாள் திரும்பிய போதுதான் நடந்து முடிந்த கதை தெளி வாகியது.

**து**க்கத்தின் அடையாளமாகத் தெரிந் தவர்கள் வரும்போது மட்டும் மூக்கை உறிஞ்சி முழுங்கிக் கொண்டிருந்த போது தான் அந்தத் தந்தி வந்தது.

May God bless you with ever lasting life for your Historical efforts - When is your funeral? -John

''ரோக்'' உரக்கவே கத்தினாள். கை கழுவிவிட்டதற்கான அறிகுறி.

**ஹோ**ட்டல் பேஸினில் எச்சில் கையைக் கழுவிக் கொண்டிருந்தான் ஜான்.

அப்பா சொன்னது போல் அவனுக்கு ஐ க்யூ ஜாஸ்தி. பாங்கில் வேலை கிடைத்து விட்டது.

செய்தியைச் சொன்ன நண்பனின் கைங் கரியம்: 'ஸ்வீட்-காரம்-காப்பி!' — தந்திக் குப் பணம்.

தெரிந்துதான் எட்வர்டு ஸார் கவலை யின்றிக் கண்ணை மூடிவிட்டிருந்தார்போலும்.

சவ அடக்கச் சடங்குகளில் அவன் கலந்து கொள்ளவில்லை. அவனைப் பொறுத்தவரை யில் அவர் சாகவில்லை.

''மை டாட்... மை டாட்... யூ ஆர் லிவிங் இன் மை ஹார்ட்.''

தாய்க்கோழி கொத்தித் துரத்திவிட்டது. வளர்ந்தவன்தானே! தப்பில்லை!

இனி நோ ப்ராப்ளம்ஸ்...

அவன் வாழ்ந்திருப்பான்...

**வி**க்டோரியா அம்மையாருக்கும் குறை-யில்லை.

எட்வர்டு ஸாரின் பி. எஃப், கிராச்சுடி, பென்ஷன், இன்ஷூரன்ஸ், இன்ன பிற... 'ல'கரம் தேறும்.

நோ ப்ராப்ளம்ஸ்...

சிறந்த சமூக சேவகி பட்டம் கிடைத் தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. அம்மை யாரும் வாழ்ந்திருப்பார்கள்.

ஆமென்....

---

## நீச்சல் குளம்!

சர்ச்சில் ஒன்பதாம் வகுப்பு படித்துக் கொண் டிருந்த பொழுது ஒருநாள் குளிக்கப்போனர். நீச்சல் குளத்தின் விளிம்பில் ஒரு மாணவர் நின்று கொண்டு சிந்தனையில் இருந்தார். சர்ச் சில் அவரைத் தண்ணீரில் தள்ளி விட்டுவிட்டார். தள்ளும்பொழுதே அம்மாணவர் அரையில் இருந்த டவலைப் பிடுங்கி நிர்வாணமாக்கினர்! இதனைக் கண்டு சிரிக்கவேண்டிய மற்ற மாண வர்கள் பயந்தார்கள். சர்ச்சிலைப் பார்த்து, ''டேய்! இன்றோடு தொலைந்தாய்! அவன் யார் தெரியுமா? அமரி! சிறந்த கால்பந்தாட்ட வீரன்! இப் பள்ளியிலேயே பெரிய பயில்வான்... கரை யேறி வந்து உன்னை அப்பளம் ஆக்குவான் பார்!'' என்று கூவினர்கள். அவ்வளவுதான்! சர்ச்சில் தொடை நடுங்க ஆரம்பித்து விட்டது. அமரி கரைஏறியதும் ஏதேதோ உளறிக் கொட்டி வெறி மூடி, "அவனைச் சிரிக்க வைத்துவிட்டான் சர்ச்சில். அமரியின் கோபம் பறந்து விட்டது. சர்ச்சிலின் முதுகில் தட்டிக்கொடுத்து அனுப்பி வைத்தான். பிற்காலத்தில் சர்ச்சில் இங்கிலாந்து பிரதமராக ஆனபொழுது அந்த அமெரிக்கு மந்திரி சபையில் இடங்கொடுத்தார்.

-க. ந. சுப்பிரமணியம்



# வருவான் ராஜகுமாரன்



ராண்டார் கை

## 2

ப்ரியாவும் டாக்டர் ஆனந்தும் வரவேற்பு அறையில் உட்கார்ந்திருந்தார்கள்.

"டாக்டர், நீங்க கொடுத்த இன்ஜக்ஷன் ....மம்மி நல்லாத் தூங்கறாங்க...."

"ப்ரியா அது இன்ஜக்ஷன் எபெக்ட் மட்டும் இல்லை. வேறே காரணமும் இருக்கு. எ வெரி குட் ரீஸன்... ஒன்னைப் பத்தி..."

டாக்டர் சிரித்தார்.

"ஓ அதைச் சொல்றீங்களா!" – அவளும் சிரித்தாள்.

"ப்ரியா நீ இவ்வளவு சீக்கிரத்திலே பார்வதி அம்மாவை உன் கையிலே போட்டுப் பேன்னு எதிர்பார்க்கல்லே... உனக்குத் தெரியுமா அந்த அம்மாவுக்கு உன் குழந்தை அழற சப்தம் இப்பவே கேக்குதாம்! அதாவது ஆண் குழந்தை!"

டாக்டர் பலமாகச் சிரித்தார்.

ப்ரியாவின் முகம் லேசாகச் சிவந்தது. அவளால் சிரிப்பை அடக்க முயன்றும் முடியவில்லை. அவள் முன்னால் வாழ்ந்த சூழ்நிலையில் இப்படிக் கேலியும் சிரிப்பும் இருந்ததில்லை. இந்த வீட்டுக்கு வந்த பிறகுதான் அவள் மனத்தில் நிம்மதி, சந்தோஷம் வேரூன்ற ஆரம்பித்தது. "டாக்டர்! இந்த மாதிரிப் பேச்செல்லாம் பார்வதி அம்மாவுக்குச் சந்தோஷத்தைக் கொடுக்கிறதா இருந்தா எனக்கு ஆட்சேபனை இல்லேயே... ஆனா டாக்டர் ஒங்க கிட்ட ஒரு விஷயம் பேசணும். நீங்க தப்பா எடுத்துக்க மாட்டீங்கன்னு நினைக்கிறேன்."

"எதைப் பத்தியம்மா?"

"டாக்டர் எனக்குக் கேட்கவே தயக்கமா இருக்கு... பட்...."

"ப்ரியா தைரியமாக் கேளேன். தெரிஞ்சாச் சொல்றேன். இல்லேன்னா தெரியாதுங்கறேன். இட்ஸ் ஸோ ஸிம்பிள்."

"டாக்டர்.... நீங்க.... கிரிஷ் நெஜமாவே திரும்பி வருவாருன்னு நினைக்கிறீங்களா? அவர் உயிரோடு இருக்கிறார்னு நம்பறீங்களா?"

"ப்ரியா... மொதல்ல எனக்கும் உன் மாதிரிதான் சந்தேகம் இருந்தது. ஆனா இப்ப இல்லே... என்ன நான் சொல்றது புரியலேயா... லெட் மீ எக்ஸ்ப்ளேன். உனக்கும் விஷயம் தெரிஞ்சிருக்கிறது நல்லது."

"ப்ளீஸ் டாக்டர்."

"ப்ரியா! பார்வதி அம்மா அவங்க ஸன் கிரிஷைப் பத்தி எல்லா விஷயத்தையும் என் கிட்டச் சொன்னாங்க. கிரிஷ் இண்டியன் ஏர் போர்ஸ்லே கேப்டன். ஹிமாலயாஸ் கிட்டப் ப்ளேன் பண்ணும்போது இன்ஜின் ட்ரபிள் வந்து கிரிஷ் மத்தவங்க எல்லாருமே வெளியே குதிச்சிட்டாங்க. பாரச்சூட் ஜம்ப் பண்ண கிரிஷ், என்ன ஆனான்னு இதுவரைக்கும் தெரியலே. இறந்து போனதாகவும் தகவல் இல்லே. கிரிஷைத் தேடிக் கண்டுபிடிக்கிற பொறுப்பை அந்தம்மா என் கிட்ட ஒப்படைச்சாங்க. நான் டெல்லி, மீரட், எல்லா இடமும் சுத்தினேன். பல ஆர்மி ஆஃபீஸர்களைச் சந்தித்தேன். அதுல ஒரு உண்மை எனக்குக் கிடைச்சது... அதாவது கிரிஷ் எங்கேயோ உயிருடன்தான் இருக்கான்."

"ரியலி டாக்டர்!"

"ஆமா. கிரிஷ் ஈஸ் அலைவ். எங்கே அப்படீங்கறதைக் கண்டு பிடிக்கிறது அடுத்த ஸ்டெப்.... எனக்கு ஆர்மி சர்க்கிள்ஸ்ல நிறைய ப்ரண்ட்ஸ் இருக்காங்க. அரசாங்கத்திலயும் நிறைய த் தொடர்பு இருக்கு. அதையெல்லாம் வெச்சி... நம்ம முயற்சிகள் வீண் போகாதென்று நெனக்கிறேம்மா. அதான் நான் இப்பச் சொல்ல முடியும்."

"உங்க நம்பிக்கை முயற்சி வீண் போகாது டாக்டர். நல்லதை நினைக்கிறீங்க. நல்லதே நடக்கும்."

''ப்ரியா, நம்ப எல்லாருமே நம்பிக்கையிலே தான் வாழுறோம்... நீ படிச்சிருப்பேன்னு நினைக்கிறேன். 'ஹோப் ஸ்பிரிங்ஸ் எடர்னல் இன் ஹ்யூமன் ப்ரஸ்ட்'... நீ நெனைக்கிறபடி எல்லாமே நல்லாவே நடக்கட்டும். அப்படி நடந்தா என்னை விடச் சந்தோஷப்படறவன் வேற யாருமே இருக்க முடியாது.'' சிறிது நேரம் இருவரும் மௌனமாக இருந்தார்கள்.

''டாக்டர்...''

''எஸ் ப்ரியா?''

''இன்னும் ஒரு சந்தேகம். இந்த வீட்டுலே எங்கேயுமே ஃபோட்டோவே இல்லியே... கிரிஷ்தானாகட்டும்... மேஜர் மல்லிக்... நாட் ஈவன் மம்மீஸ்... யாருதுமே இல்லியே அது ஏன்?''

''ப்ரியா எனக்கும் முன்னே சந்தேகம் இருந்தது. இப்ப இல்லே... ஏதோ ஒரு மூடுலே மேடம் சொன்னாங்க... நான் அவங்களை மீட் பண்றதுக்கு முந்தி அதாவது, இவங்க மெட்ராஸ்ல இருந்தபோது இவங்களுக்கு ஏதோ நெர்வ்ஸ் பிரேக் டௌன் மாதிரி வந்துதாம்... ஒரு வகையான நரம்புத் தளர்ச்சின்னு வெச்சுக்கயேன்... அப்ப ஒரு பிரபலமான ஸ்பெஷலிஸ்ட், அதாவது ஒரு டாப் நியூரோ பிஸிஷியன் வைத்தியம் பார்த்திருக்காரு. அவர் சொன்னாராம்.... கிரிஷ், மேஜர் மல்லிக் இவங்களோட படங்களெல்லாம் எடுத்துடுங்கன்னு... அதையெல்லாம் அடிக்கடி பார்த்துக்கிட்டே இருந்தா இந்த அம்மாவுக்கு டென்ஷன் ஜாஸ்தி ஆகலாம்.... மைண்டே அப்பெக்ட் ஆகலாம் அப்படீன்னு ஒபீனியன் கொடுத்தாராம்... அஃப்கோர்ஸ் அந்த டாக்டர் சொன்னது ரொம்பக் கரெக்ட். அதனாலதான் இந்த வீட்லெ... இவ்வளவு பெரிய பங்களாவுலே ஒருத்தரோட ஃபோட்டோவும் இல்லே... பாவம் நெனைச்சுப் பார்த்தா ரொம்பவும் வருத்தமா இருக்கு இல்லியா?''

''டாக்டர் இதுக்கெல்லாம் மருந்து கிரிஷ் திரும்பி வரது ஒண்ணுதான். அவர் சீக்கிரம் வருவார்னு எதிர்பார்ப்போம்...''

''ஆமாம்மா, நானும் அந்த நல்ல நாளைத் தான் எதிர்பார்த்துக்கிட்டிருக்கேன்...''

**ப்**ரியா குளித்துவிட்டு, காலை சிற்றுண்டியை முடித்துவிட்டுப் பார்வதியைக் கவனிக்கத் தயாரானாள். காலை எட்டரை மணிக்குப் பார்வதி இரண்டு ஸ்லைஸ் ரொட்டி சாப்பிடுவாள் வெண்ணெய் தடவாமல். அத்துடன் ஒரு டம்ளர் இளநீர். அதற்குப் பிறகு வழக்கமான மாத்திரைகள். மாத்திரைகளைக் கண்டவுடன் அவளுக்கு எரிச்சலாக வரும். இது வழக்கமாக நடக்கும்.

பார்வதி பலமாக ஏப்பம் விட்டாள். ப்ரியா கட்டிலிலிருந்த தலையணைகளை ஒன்றின் மேல் ஒன்றாக அடுக்கி வைத்துப் பார்வதியை அதன் மேல் சாய வைத்தாள். சாப்பிட்டவுடன் அரை மணி நேரம் அவளை அப்படி உட்கார வைக்க வேண்டும் என்று டாக்டரின் உத்தரவு.

''ப்ரியா!''

''எஸ் ஆன்டி!''

''உனக்கு எத்தனை தடவை....''

''ஸாரி... மம்மி...!''

''ப்ரியா இந்தக் காலத்துப் பெண்கள்ளாம் இவ்வளவு டல்லா இருப்பாங்கன்னு நான் நெனைக்கவே யில்லே.''

''ஸாரி மம்மி. மன்னிச்சுக்கங்க.''

''ஓகே ஓகே... ப்ரியா நீ ஒரு வேலை பண்ணு. நீ உடனே ஒரு நல்ல புடவை, ரவிக்கை போட்டுக்க...''

''என்ன மம்மி... இப்ப நான் டிரெஸ் பண்ணியிருக்கிறது நல்லாத்தானே இருக்கிறது.''

ப்ரியா தன்னைத் தானே பார்த்துக்கொண்டாள். கழுத்து—வரை ரவிக்கை... மஞ்சள் நிறப் புடவை... கழுத்தைச் சுற்றி மெல்லிய தங்கச் சங்கிலி, காதில் பவழம் வைத்த தோடுகள்.



''ப்ரியா நான் உனக்கு எத்தனை தடவை சொல்லியிருக்கேன் கேள்வி கேட்கக் கூடாதுன்னு... நான் ஏதாவது சொன்னேன்னு இன்ஸ்டன்ட் ஒபீடியன்ஸ்...அதுதான் எனக்குத் தேவை...ப்ரியா ஒரு விஷயம் நீ மறக்கக் கூடாது. நம்மது ஆர்மி ஃபேமிலி, அதுலயும் மேஜரோட ஃபேமிலி.''

பார்வதியின் கண்கள் ப்ரியாவைத் துளைத்தன.

''ப்ரியா உடனே புடவையை மாத்து. அந்த பீக்காக் ப்ளூ புடவை இருக்கே அது ஒனக்கு நல்லா இருக்கு. அத உடுத்திக்கோ. நம்ம லாயர் சார் இருக்காரே, அவர் அந்தக் காலத்து ஆசாமி... அவர் புடவை, நகை, செருப்பு இதெல்லாம் கவனிச்சுப் பாப்பாரு! நீ அவரைப் போய் மீட் பண்ணணும். வெறும் ப்ரியாவா இல்லே. என்னுடைய வருங்கால மருமகளா!''

''மம்மி நான் போயி என்ன பண்ணணும்?''

''ஓ உன்கிட்ட நான் சொல்லலே இல்லியா... மிஸ்டர் சாரியோட ஒரு முக்கியமான விஷயத்தைப் பத்திப் பேசியிருக்கேன். அது விஷயமா அவர் உன்னைப் பார்க்கணும்னு சொல்றார்.''

''என்ன விஷயம் மம்மி?''

''என்னோட உயிலைப் பத்தி.''

ப்ரியா சற்று அதிர்ச்சி அடைந்தாள். உயிலைப் பற்றிய பேச்சு இப்பொழுது ஏன்? அதுக்கு என்ன அவசரம்?

''மம்மி இப்போ எதுக்கு இதெல்லாம்?''

பார்வதி தன் கையை உயர்த்தினாள்.

''இத பாரு ப்ரியா எதுக்கு எங்கே என்ன இதெல்லாம் எங்கிட்டக் கேட்கக் கூடாது. ப்ரியா என் உடம்பைப் பத்தி எனக்குத் தெரியும். நான் உயிரோட இருக்கிறதே என் கிரிஷுக்காகத்தான். அவன் நிச்சயம் திரும்பி வருவான் அப்படீங்கற நம்பிக்கை தான் எனக்கு மருந்தா உபயோகப்படுது... டாக்டர் ஆனந்தும் நீயும் என் வாயிலே அடைக்கிறீங்களே டாப்லெட்ஸ் அதனால தான் நான் உயிரோட இருக்கேன்னு நினைச்சா நீங்க ரெண்டு பேருமே ஸ்டுபிட்!... கிரிஷ் வந்த மறு நிமிஷம் ஒங்க ரெண்டு பேருக்கும் கல்யாணத்தைப் பண்ணி வெச்சிருவேன். அதுக்கப்புறம் நிம்மதியா ஹாய்யா கண்ணை மூடுவேன். அதுக்காகத்தான் என் உயிலை இப்பவே எழுதறேன். வக்கீல் சாரி கிட்டே எல்லா விஷயத்தையும் சொல்லி யிருக்கேன். ப்ரியா உனக்குத் தெரியுமோ தெரியாதோ.. எனக்கு ஆஸ்தி நிறைய இருக்கு.''

ப்ரியா தலையை ஆட்டினாள்.

''ப்ரியா அந்த ஆஸ்தி பூரா கிரிஷுக்கும் உனக்கும்தான்!''

ப்ரியாவின் உடலில் மின்சாரம் பாய்ந்ததைப் போன்ற உணர்ச்சி.

''எனக்கா மம்மி?''

ப்ரியா சற்றே உரக்கவே கத்தினாள்.

''எஸ். இதில ஆச்சரியப்படறதுக்கு என்ன இருக்கு? என் ஆஸ்தி என் புள்ளைக்கும் மருமகளுக்கும் போகாமே அடுத்த தெரு அப்துல் காதருக்கா போகும்?''

''மம்மி நான் நேத்து வந்தவ...''

''ஷட் அப் ப்ரியா ஷட். அப்!''

''மம்மி இதுக்கெல்லாம் இப்ப என்ன அவசரம்... முதல்லே உங்க பிள்ளை வரட்டும். அதுக்கப்புறம்...''

''ப்ரியா ஸ்டாப் தட். நான் என்ன சொல்றேனோ அதைச் செய். எங்க ஃபேமிலே எந்த மருமகளும் கேள்வி கேக்கறது கிடையாது. கூடாது... நானே அந்த நாள்லே கேக்கலேன்னு பார்த்துக்கோயேன். எனக்கு இல்லாத உரிமை உனக்கு நிச்சயமா கிடையாது. ப்ரியா நான் அப்பவே லிப்ஸ்டிக் யூஸ் பண்ணேன்... ஹை ஹீல்ஸ், ஸ்லீவ்லெஸ் பிளவுசு எல்லாம் போட்டேன்.... என்னை ரொம்ப டேரிங்குன்னு சொன்னாங்க. ஆனா எங்க மாமியாரைக் கேள்வி கேட்டது கிடையாது. அது எங்க ஃபேமிலி டிரெடிஷன். ஒரு வாரம் நாங்க அம்பாலாலே இருக்கச்சே என் மாமியார் வந்தாங்க. கல்யாணம் ஆன புதுசு. ஒரு டின்னருக்கு மூணு பேரும் காருல கிளம்பினோம். என் மாமியார் என்ன பண்ணுங்க தெரியுமோ.... ஃப்ரண்ட் சீட்ல என் வீட்டுக்காரருக்குப் பக்கத்துல ஒக்காந்துட்டாங்க. என்னைப் பின்னாடித் தள்ளிட்டாங்க. சின்ன வயசு. அழுகையே வந்துடுச்சு. அதெப் பார்த்தாங்க மம்மி.... ஃபேமிலி டிரெடிஷன்னு சொன்னேனே அதை என்னன்னு புரியவெச்சாங்க.''

ப்ரியா சிரித்தாள்.

''ப்ரியா இது சிரிக்கிற விஷயமில்லே. ஃபேமிலி டிரெடிஷன். நீ போயி டிரெஸ் சேஞ்ச் பண்ணிண்டு சாரியை மீட் பண்ணு. மீதியெல்லாம் அவர் சொல்லுவார். போறதுக்கு முன்னாடி இந்த பில்லோவெல்லாம் இப்படிப் பின்னாடி வையேன். கொஞ்சம் ரெஸ்ட் எடுத்துக்கறேன். முதுகெல்லாம் வலிக்குது....''

**மி**ஸ்டர் கோவிந்தராஜாச்சாரி! குட்டையான. தொந்தி பருத்த ஆசாமி. சென்னையின் பிரபல வக்கீல். அறுபத்தியாறு வயதைத் தாண்டியிருந்தாலும் கண்களில் குறும்பு கலந்த ஒளி... தேக்க மர சுழலும் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு அவர்

''சாருக்கு மசால்தோசை சொல்லியிருக்கேன். இந்தாங்க கடல்புரு மூணு பாகமும் இருக்கு. படிச்சிட்டிருங்க... இதே க்விக்கா சப்ளை பண்ணிடறேன்.''

-சி. மோகன்தாஸ்



# வண்ணங்களில் எண்ணத்தை பிரதிபலிக்க பிஜிபியின் பட்டுப் புடவைகள்

காஞ்சிபுரம், தாமாபுரம் ஆரணி
பனாரஸ் பட்டுப் புடவைகள்,
பட்டு வேட்டிகள் மற்றும்
மில் ஜவுளிகள் நியாய விலையில்.



ஏர்கண்டிஷண்ட்
ஷோரூம்

**பி.கோவிந்தசாமி பிள்ளை
எண்டர்பிரைஸஸ்**

258, ஔவை சண்முகம் சாலை
சென்னை 600 086
போன்: 86709

SUSAK PGP 1005

10% சிறப்புத் தள்ளுபடி, 10-10-81 முதல் 26-10-81 வரை
ஞாயிற்றுக்கிழமைகளிலும் விற்பனை உண்டு

தம் நரைத்த தலையைத் தடவிக்கொண்டு ப்ரியாவை வரவேற்றார். அறையில் எங்கு பார்த்தாலும் சட்டப் புத்தகங்கள். அடுத்த அறையில் கட்சிக் காரர்களுடன் சாரியின் ஜூனியர்கள் சளசளவென்று பேசிக்கொண்டிருந்தார்கள். அதற்கு அடுத்த வராந்தாவில் இரண்டு வயதானவர்கள் வேகமாக டைப் அடித்துக் கொண்டிருந்தார்கள்.

''ப்ரியா இந்த மாதிரி நான் ஒரு உயில் டிராஃப்ட் பண்ணதே யில்லே. ஒன்னோட மாமியாருக்காகத்தான்.... மாமியார்னு சொல்றதுலே ஒனக்கு ஒண்ணும் ஆட்சேபணை இல்லையே! ப்ரியா எனக்கு என்னவோ அவ்வளவு சரியாப் படலே.''

''எதைப் பத்தி ஸார்?''

சாரி நாற்காலியில் சற்று முன்னால் நகர்ந்தார். ''ப்ரியா நான் நாற்பத்தாறு வருஷமா பிராக்டீஸ் பண்றேன். சாதாரணமா ஒரு க்ளையண்டைப்பத்தி மத்தவாளோட டிஸ்கஸ் பண்ணக் கூடாது. அது ப்ராப்பர் இல்லேன்னு சொல்லுவா. பட் ஒன்னோட விஷயத்திலே ஐ வில் மேக் என் எக்ஸெப்ஷன். ஏன்னு நீயும் கிரிஷ்ணாந்தான் உயில் பிரகாரம் வாரிசுகள். அவளுக்கு எக்கச்சக்கமான சொத்து இருக்கு. ப்ரியா, சொல்லப்போனா ஒன்னுது ரொம்ப அதிர்ஷ்டமான ஜாதகமாக இருக்கணும்.''

சாரி சிரித்தார். ஆனால் ப்ரியாவின் முகத்தில் எந்த விதமான மாறுதலும் இல்லை.

''இப்போ கிரிஷ் எங்கேன்னு தெரியலே. அவன் வருவானு இல்லையான்னும் தெரியலே. ஒங்க அம்மா தன் புள்ளையாண்டான் நிச்சயம் வருவான் அப்படின்னு சொல்றா. டாக்டர் ஆனந்துக்கும் அதுல நம்பிக்கை ஜாஸ்தி. ஏதோ டில்லி இல்லின்னு போயிட்டு வந்தார். ஆனா நான் கிரிஷைப் பாத்தது இல்லே. அவன் எவ்வளவு நாளா காணமப் பூட்டான்னு தெரியலே....லா பிரகாரம் ஒருத்தன் ஏழு வருஷம் கன்டினியுவா காணமப் பூட்டான்னா அவன் உயிரோட இல்லேன்னு எடுத்துக்கலாம். இதெல்லாம் லீகல் ப்ருஸம்ஷன்னு சொல்லுவா. சட்டப் பிரகாரம் அது செல்லும்.''

ப்ரியா முகத்தில் வியப்பு.

''அப்படி ஒரு சட்டமா ஸார், எனக்கு இத்தனை நாளாத் தெரியாது.''

''ப்ரியா இந்த விஷயத்தைப் பத்தி அந்த அம்மாகிட்டக் கேட்க மனசே வரல்லே. நான் நெனக்கிறேன், கிரிஷ் ஏழு வருஷத்துக்கு மேலே மிஸ்ஸிங்கா இருக்கான்னு. என் தியரி கரெக்டா இருந்தா லா பிரகாரம் இறந்துபோன ஒரு மனுஷன் பேர்லே உயிலே எழுதியிருக்கேன். அது சரின்னு எனக்குப் படல்லே. அதனாலேதான் இந்த இஷ்யூவை இழுத்தேன். அதுலே ஒங்க அம்மாவுக்கு என் மேலே கோபம் கூட... கொஞ்ச நான் முன்னாடி ஃபோன்லேகூப்பிட்டுத் தொண்டை கிழியக் கத்தினா. டாக்டர் ஆனந்தை வேறே அனுப்பிச்சுப் பேசச் சொன்னா. எனிவே என் வேலையை நான் பண்ணிட்டேன். ஹியர் இட் ஈஸ்....''

ஒரு நீளமான நீலக் கவரை எடுத்துப் ப்ரியாவிடம் கொடுத்தார்.

''ப்ரியா இத ஒன் வருங்கால மாமியார் கையில குடு. படிச்சுப் பார்த்து சைன் பண்ணச் சொல்லு. இரண்டு பேரு சாட்சிக் கையெழுத்துப் போடணும். அவங்க எதிரிலதான் பார்வதி அம்மாளும் கையெழுத்துப் போடணும். சொத்துக்கு நீ ஒரு வாரிசா இருக்கிறதாலே நீயே விட்னஸ் கையெழுத்துப் போட்டா நன்னா இருக்காது. டாக்டர் ஆனந்த் பேஷாக் கையெழுத்துப் போடலாம். அவ்வளவுதான்.''

''சார்... நீங்க சொன்னபடியே செய்யறேம்.''

''குட்... நீ இந்த உயிலே வாங்கிண்டு போறவேளை அந்த கிரிஷ்ணாம் வந்து சேரட்டும்.... அந்த அம்மாவும் தீர்க்காயுசா இருக்கணும். உன் கலியாணத்துக்கும் கெட்டி மேளம் கொட்டணும்.''

கலகலப்பாகச் சிரித்தார். (தொடரும்)

# நீங்கள் தஞ்சை வாசியா?

தஞ்சையில் வசிக்கிறீர்களா? அல்லது தஞ்சை நகர் பற்றி நன்றாக அறிந்தவரா? அவ்வாறானால் அந்நகரைப் பற்றி ஒரே ஒரு அபூர்வமான விஷயம் குறித்து எழுதுங்கள். அனைவரும் அறிந்த பிரபலமான விவரங்களைத் தவிர்த்து விநோதமான ஒரு அம்சத்தைக் குறிப்பிட்டு ரத்தினச் சுருக்கமாக எழுதுங்கள். அதன் மூலம் நகரின் குறை நிறை இரண்டையுமே சுட்டலாம்.

உண்மைத் தகவல் என்ற உறுதி மொழி தேவை. பிரசுரமாகும் தகவல்களுக்குப் பரிசு உண்டு. முடிவு தேதி அக்டோபர் 20.

உறையின்மேல் 'தஞ்சை பற்றிய தகவல்' என்று குறிப்பிடவும். திருப்பி அனுப்புதல், கடிதப் போக்குவரத்து இல்லை.



# பிரிட்டானியா பால் பிஸ்கட்

## வளரும் குழந்தைகளுக்கு சுவையான துணை




சத்துமிகுந்த,
சுவையான

**பிரிட்டானியா**

**மில்க் பிக்கிஸ்**

லின்டாஸ் BBC.MB-3-172-TM

ஓர் உயிரின் ஜீவ மரணப் போராட்டத்தின் பரிதவிப்பை, முதல் தடவை ஒத்தி வைத்துச் செய்த கொடுமையை இரண்டாவது தடவை செய்வதற்கு மனமின்றி அன்று இரவு தீர்ப்பு எழுதியே தீருவது என்ற தீர்மானத்துடன் சாயிநாதன் மேஜை முன் உட்கார்ந்திருந்தார். அந்தத் தீர்ப்பை எழுதுவதற்கு ஏனோ அவருக்கு மனம் வரவில்லை.

பேனாவை எடுத்தபோது கை மூளைக்குக் கட்டுப்படப் பிரியமில்லாதது மாதிரி அப்படியே நின்றது. எப்போதுமில்லாத சஞ்சலம் மனத்தில் எழ, எழுதவிருந்த தீர்ப்பின் வாசகங்கள் தன்னை நோக்கி இளக்காரமாய்ச் சிரித்துக் கேலி செய்வதாய் மனத்தில் எழ, பேனாவைப் போட்டுவிட்டு சிகரெட் ஒன்றைஎடுத்துப் பற்றவைத்துக்கொண்டார். சிகரெட்டின் நுனி நெருப்பையே பார்த்துக் கொண்டிருந்த அவருக்குத் திடீரென்று அந்த இளைஞனின் கண்களின் ஜொலிப்பு ஞாபகத்துக்கு வந்தது. கூண்டில் நின்றபோது அவன் கண்கள் கூட இப்படித்தானே ஒளிர்ந்தது....

சாதாரண உயரம்...பூஞ்சையான உடல். அதிலும் உள்ளே இருந்ததால் வெளுத்துப் போய்த் தெரிந்தான்— சிரைக்கப்படாத தாடி மீசை, கலைந்துபோன தலை முடி இவைகளுக்கு மத்தியில் வித்தியாசமாகத் தெரிந்தது ஒன்றுதான் — விகசித்துப் போயிருந்த அவன் கண்கள்—

சாயிநாதன் மனிதர்களைக் கணிப்பதில் அசகாய சூரர் என்று தெரியவர். அந்தக் கூண்டில் நின்ற எவனும் நேரடியாக அவரைப் பார்க்க மாட்டான் — பார்க்க முடியாது... அம்பு மாதிரித் தைக்கும் அவர் பார்வையில் கலங்கிப் போகாதவர்களே கிடையாது...

ஆனால் சீனிவாசன் கூண்டில் ஏறியதில் இருந்தே அவன்மீது ஒரு மதிப்பு பெருகியிருந்தது அவருக்கு. அவன் கலங்கிப்போய் நிற்கவில்லை. தடுமாறிப் பேசவில்லை: ஒரு கொலையைச் செய்த நெருடல்... குற்ற உணர்வு... ஒருத்தனைக் கொன்றுவிட்டதால் பெரிய பெரிய கொலைகாரனுக்கெல்லாம் எழும் கழிவிரக்கம் கிஞ்சித்தும் இல்லாமல் பேசினான் — சாயிநாதன் கேள்வி கேட்டபோது நேராக அவர் முகத்தைப் பார்த்தான். அவர் பார்வையின் கூர்மையில் மற்றவர்கள் மாதிரி சலனப்படாமல் புன்னகையோடு நின்றான்.

அரசு வக்கீல் சமர்ப்பித்ததைக் கவனமாகக் கேட்டார் சாயிநாதன். முடிந்தவுடன் சீனிவாசன் பக்கம் திரும்பினார்.

''மிஸ்டர் சீனிவாசன்.... பப்ளிக் பிராசிக்யூட்டர் சொன்னதைக் கேட்டீர்களா? அதற்கு உங்கள் பதில் என்ன... உங்களுக்காக வாதாட வக்கீல் ஏதும் வைக்கவில்லை போல் தெரிகிறதே...''

''எஸ் யுவர் ஆனர்...''

''ஏன்... நீங்களே வாதாடப் போகிறீர்களா...''

''வாதாடுவதற்கு எதுவும் இல்லை யுவர் ஆனர்... நான் தீர்ப்புக்காகக் காத்திருக்கிறேன்... பப்ளிக் பிராசிக்யூட்டர் சொன்னது மாதிரி — முன் விரோதம் காரணமாக—

போட்டிக் கதை-6

# கூண்டுக்குள்ளே சில சட்டங்கள்

கிருஷ்ணா குரு

இட்டமிட்டு — நேரம் பார்த்து — ராஜு அங்கே இருக்கிற சமயம் தெரிந்து எல்லா ஏற்பாடுகளுடன் வந்து அவனை நான் கொன்றது நிஜம்தான் யுவர் ஆனர்... அவனைக் கொன்றதற்காக நான் வருத்தப்படவில்லே. மாறாகக் காரியத்தைச் சரியாக முடித்து விட்ட சந்தோஷமே ஏற்படுகிறது...''

''நீங்க எவ்வளவு படிச்சிருக்கீங்க சீனிவாசன்...''

''எம்.ஏ. படிச்சிருக்கேன்.. யுவர் ஆனர்... ஒரு கம்பெனியிலே அஸிஸ்டெண்ட் மானேஜர்....''

''சீனிவாசன்... நீங்க கொலே செய்ததா ஒத்துக்கொண்டதாலே எல்லாம் முடிஞ்சிடறதில்லே... நீங்க கொலே செய்த சந்தர்ப்பம்... அதோட பின்னணி எல்லாம் தெரிஞ்சாகணும்... நீங்க செய்திருக்கிற கொலே எந்த மாதிரி சூழ்நிலேயிலே செய்த துன்னு எங்களுக்குத் தெரிஞ்சா அது அனுதாபத்துக்குரியதா, இல்லே தண்டனைக்குரியதான்னு முடிவு செய்து நியாயமான தீர்ப்புக் கொடுக்கச் சௌகரியமா யிருக்கும் இல்லேயா...''

''எஸ் யுவர் ஆனர்... நீங்க சொல்றது ரொம்ப சரி... நான் சில விஷயங்களைச் சொல்லப் பிரியப்படறேன்... அவ்வளவும் நிஜம் — இதை நான் சட்டத்துக்குப் பயந்து, அதனுடை அனுதாபம் என் மேலே விழணும்னு சொல்லலே... நான் தனி மனிதனில்லே...ஒரு சமுதாயத்தின்... பாதுகாப்பில்லாத ஒரு சமுதாயத்தின் தனிப்பட்ட பிரதிநிதி என்கிற முறையிலே என் வழக்கை நான் இங்கே சமர்ப்பிக்கக் கடமைப்பட்டிருக்கேன். என் கதையை எல்லோரும் தெரிஞ்சுக்கணும்... இந்தக் கதை, சட்டம் எனக்கு— என்னைப் போல பல பேருக்கு எப்படிப் பாதுகாப்புத் தர முடியல்லேன்னு சொல்ற கதை....

கூட்டத்தை விலக்கிப் போக முடியாமல் ஆட்டோ டிரைவர் யோசித்துக் கொண்டிருந்தபோது எதனால் அந்தக் கூட்டம் என்று தெரிந்துகொள்ளும் ஆவலுடன் ஆட்டோவை விட்டு இறங்கி நின்றான் சீனிவாசன்.

''எதிர்பாராத சந்தோஷம் எது?''
''புருஷனுடைய பேண்ட், சட்டையைத் தோய்க்கும்போது பாக்கெட்டில் 10 ரூபாய் இருப்பதைப் பார்த்ததும் ஏற்படுவது!''
- சம்பத் குமாரி




''ஸார்...ஆட்டோ இந்த வழியாப் போக முடியாது... நாம வேற வழியாப் போயிடலாம்...''

''அதென்னப்பா கூட்டம்...''

''அது நமக்கு எதுக்கு ஸார்... ஆபீஸ்லே வேலே இல்லே... வாங்க, ஏறுங்க...''

''அத்தனை பேர் சேர்ந்துட்டு ஒருத்தனை அடிக்கறாங்க... யாரும் விலக்கலே பாரு... செத்துப் போயிட்டான்னு....''

சீனிவாசன் ஆட்டோ டிரைவரை மீறிக் கூட்டத்தில் நுழைந்து கீழே கிடந்தவனை நெருங்கினான். எல்லோரும் பீதியுடனும் ஆச்சரியத்துடனும் சீனிவாசனைப் பார்த்துக் கொண்டிருந்தபோது கீழே கிடந்தவனைத் தூக்கினான்.

''யார்ராஇவன்...குழாயும் கோட்டுமா?''

''ஏன்யா உங்களுக்கு இரக்கமில்லே... ஒருத்தனைப் போட்டு இத்தனை பேர் சாகடிக்கிறீங்களே....''

''நீ அவனுக்கு மச்சானுடா...''

''மரியாதையாப் பேசுங்க ஸார்...''

''டேய்... ஸாருக்கு மரியாதை பண்ணு நகர்ந்து...''

ஒரு நிமிடத்தில் பெரிய கும்பலில் சடசட வென்ற அடி உதை குத்துக்களுக்கு மத்தியில் திணறிக் கொண்டிருந்தான் சீனிவாசன்... எழுவதற்குள் உதைத்தவர்களைக் காணும். சாகக்கிடந்த ஆளைக் கூட ஆட்டோவில் கொண்டு போயிருந்தார்கள்.

ஒருத்தர் கூட கீழே விழுந்து கிடந்த சீனிவாசனுக்கு ஆதரவாக வரவில்லே. கூட வந்த ஆட்டோக்காரன் தூரத்தில் இருந்து ஓடிவந்து ஆட்டோவுக்குக் கூட்டிப்போனான்.

''போலீஸ் ஸ்டேஷன் போப்பா...''

''வேண்டாம் ஸார்... நல்லதுக்குச் சொல்றேன்.''

''நீ போப்பா...''

ரிப்போர்ட் கொடுத்துவிட்டுக் குன்றிப் போன மனத்துடனும் கன்றிப்போன உடலுடனும் வீட்டுக்கு வந்தான்.

''ஏங்க... நமக்கெதுக்குங்க இதெல்லாம் அவன் பெரிய ரவுடியாம்... சாராய வியாபாரியாம்.. கள்ளக் கடத்தல்காரனும்... எனக்குப் பயமா இருக்குங்க...''

''பயப்படாதே சரளா... நமக்குப் போலீஸ் இல்லே?... யாரா இருந்தால் என்ன...''

பீதியுடன் கணவனைப் பார்த்தாள் சரளா.

மறு நாள் வீட்டை ஒட்டியிருந்த ஓடையில் பிணம் ஒன்று கிடப்பதாக எல்லோரும் பேசிக்கொள்ள சீனிவாசன் ஓடிப்போய்ப் பார்த்தான். ரத்தம் உறைந்து போனது அவனுக்கு -- அந்த ஆள் முதல் நாள் அடிபட்டுத்தன்னால் காப்பாற்ற முடியாமல் போனவன் — பாவிகள் கடைசியில் கொன்றே போட்டு விட்டார்கள் என்று மனம் தவித்தது. போலீஸுக்கு ஓடினான்...

''ஸார்... ஸார்... நேத்து பாளையம் ராஜு இட்ட அடிபட்ட ஆள் செத்துக் கெடக்கறான் ஸார்''

இன்ஸ்பெக்டர் அவனை நிமிர்ந்து பார்த்தார். ''பாளையம் ராஜு யாரையும் அடிக்கவில்லையாமே... நீங்க சொன்ன ஆள் குடிச்சிட்டு ரகளை பண்ணியிருக்கான் — ராஜுதான் அவனைச் சமாதானம் பண்ணி ஆட்டோவிலே ஏத்தி அனுப்பிச்சாராம்... குடிச்சுட்டு அவன் ரகளை பண்ணினதா நாலு ரிப்போர்ட் வந்திருக்கு — இப்போ செத்துட்டான்கிறீங்க. ஏகப்பட்ட குடியிலே போயிருப்பான்!''

''இல்லே ஸார்... நேத்து அந்த ஆள் குடிச்சிருந்ததாத் தெரியலே... இவங்கதான்...'' இன்ஸ்பெக்டர் அவனைத் தவிர்த்து ஏதோ எழுத முனைந்தார். ஒரு வயதான கான்ஸ்டபிள் இவனைத் தனியே அழைத்துப் போனார்.

''விவரம் புரியாத புள்ளையா யிருக்கியே.. நேத்து நான் இருந்திருந்தா ரிப்போர்ட் கொடுக்கவே விட்டிருக்கமாட்டேன். நீ என் புள்ளை மாதிரி இருக்கே... பாரு பத்துநாள்ல எனக்கு ரிடையர்மெண்டு... எனக்குத் தெரியாத சமாச்சாரமா... நான் சொல்றதை தேவ வாக்கா எடுத்துக்க... இதெல்லாம் பட்டுக்காதே...''

அவர் சொன்னதைக் கேட்டுவிட்டு போலீஸ் மீது எந்த நம்பிக்கையும் இல்லாமல் வீட்டுக்கு வந்தான். அதோடு சும்மா இருக்க விதி விடவில்லை; ஐ. ஜி.க்கு விளக்கமாக நடந்ததை எழுதிவிட நாலு நாளில் விசாரணைப்படி ஏறியது... ஒரு சைக்கிள்காரன் பாளையம் ராஜு அழைப்பதாகச்சொல்லிக் கொண்டு வந்தான்.

''எனக்கு யாரையும் தெரியாது. யாராலும் ஆகவேண்டியது ஒன்றுமில்லே...வேணுமானு வீட்டுக்கு வரச் சொல்லு... வேண்டாம்... இது பொம்பளைங்க இருக்கிற எடம். ஆபீசுக்கு வரச் சொல்லு...''

''பொம்பளைங்க இருக்கிற எடமா...!'' என்று அழுக்குக் கைலியோடு வந்திருந்தவன் ஏகத்தாளமாகச் சிரித்து விட்டுப் போனான்.

அன்றைக்கு ராஜு ஆபீஸுக்கு வரவில்லை — போன் வந்தது...

''பாரு தம்பி... நீ யாரு பேருன்னு எனக்குத் தெரியாது. ஆனா ரொம்பத் தப்பான வழியிலே நடத்துக்கறே... நீகொடுத்திருக்கிற ரிப்போர்ட்களை மாத்த வழி சொல்றேன் அதுபடி நடந்தாக்க உனக்கு நல்லது...''

''சர்தான் போய்யா... போனை வை.''

மூன்று மணி நேரம் கழித்து கட்டாயமாக வீட்டுக்குப் போக வேண்டிய அவசியம் ஏற்பட்டது. சீனிவாசனுடைய வீட்டில் ஏகப்பட்ட கூட்டம். இக்கென்றது சீனிவாசனுக்கு—உள்ளே சரளா... அலங்கோலமாகக் கிடந்தாள் — புடவை விலகி... ஜாக்கெட் பாதி கிழிந்து — ரத்த விளாரில்...

வாரிப் போட்டுக் கொண்டு ஆஸ்பத்திரிக்கு ஓடினான். டாக்டர்கள் கொடூரமான கற்பழிப்பு என்று அத்தாட்சி கொடுத்தனர். வெட்கம் மானம் விட்டு ராஜுவை எப்படியாவது உள்ளே தள்ளுவது என்ற வெறியோடு கோர்ட், போலீஸ்,—வக்கீல் என்று நடந்தான். கடைசியாக ஒரு நாள் தீர்ப்பு வந்தது...



''மீட்டருக்கும் கிலோ மீட்டருக்கும் என்ன வித்தியாசம்?''
''மீட்டர் - துணியின் விலையைச் சொல்லும் போது குறிப்பிடும் அளவு. கிலோ மீட்டர்-அதைக் கேட்டுவிட்டு நாம் ஓடும் தூரத்தின் அளவு!''
- ஜி. நடராஜன்

ராஜுவோ அவர் ஆட்களோ சரளாவைக் கற்பழித்தார்கள் என்பதற்குச் சரியான ஆதாரம் எதுவும் இல்லாததால் ராஜுவையும் அவரோடு வழக்கில் சேர்க்கப்பட்டிருக்கிற மற்றவர்களையும் நிரபராதிகள் என்று தீர்மானம் செய்து....

நிரபராதிகள்....

தீர்ப்பு வந்த பத்தாம் நாள் சீனிவாசன் பாளையம் ராஜு என்கிற கலியபெருமாளை டீக்கடையில் வைத்துக் குத்திக் கொலை செய்து அவரது சகாக்கள் இரண்டு பேரை மரண காயப்படுத்தி ஆபத்தான நிலைமையில் ஆஸ்பத்திரிக்கு அனுப்பி வைத்தான்.

''என் மனைவி கற்பழிக்கப்பட்டு சித்த சுவாதீனமில்லாமல் ஆஸ்பத்திரியிலே இருக்கிறது நிஜம் ஸார்...அதுக்கு யார் பொறுப்பு? ராஜுதான்னு உலகத்துக்கே தெரியும். ஆனா அவன் இல்லேன்னு கோர்ட்டு விடுதலை செய்துட்டது. நடந்த குற்றத்துக்கு யார் ஸார் பொறுப்பு — தண்டனை கொடுக்கல் லேன்னு குற்றமே நடக்கலேன்னு அர்த்தமா என்ன? — இங்கே குற்றம் நடந்திருக்கு— கொலை — கற்பழிப்பு — இதுகளுக்குச் சட்டத்திலே நஷ்ட ஈடு தர முடியாது ஸார்... காரணமானவங்களுக்கு தண்டனை தரதுதான் சரியான நஷ்டஈடு. ஒருத்தன் ரோட்டிலே அடிபட்டுச் சாகறதுக்கும் என் மனைவி பட்டப் பகல்லே கற்பழிக்கப்பட்டு மனநோயாளியா இருக்கிறதுக்கும் யாருமே காரணம் இல்லேன்னு — யாருமே தண்டிக்கப்பட முடியாதுன்னு அதுக்குஎன்ன ஸார் அர்த்தம்? இந்தச் சட்டமும் நீதியும் மலடு தட்டி, செயலிழந்து போச்சுன்னு அர்த்தமா? நான் செஞ்ச கொலை நியாயமானது ஸார்! அந்தச் சட்டங்களே என்னை ஆயுதமேந்த வச்சது.''

சீனிவாசன் அந்தக் கோர்ட்டே பயப்படும்படி, கோர்ட்டுக் கட்டிடங்கள் அதிரும்படி கண்களில் நீர் வழிய ஆவேசமாக, ஆணித்தரமாக முழங்கினான்.

அன்றைக்குக் கோர்ட்டு கலைந்தது...

நாளைக்கு சாயிநாதன் தீர்ப்புச் சொல்ல வேண்டும். — என்ன தீர்ப்பு எழுத வேண்டும் என்று சாயிநாதனுக்குத் தெரியும். எழுத முடியாதபடி மனச்சாட்சி குத்தியது.

சாயிநாதன் ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவராய் வெறி பிடித்தவர் மாதிரி எழுத ஆரம்பித்தார்....

சீனிவாசன் கூண்டில் நின்று கொண்டிருந்தான். சாயிநாதன் உட்கார்ந்து அவனைப் பார்த்தபோது சிநேக பாவத்துடன் புன்னகைத்தார். பரபரப்பைத் தேக்கிய கூட்டம் சாயிநாதனைப் பார்த்துக் கொண்டிருந்தது.

சாயிநாதன் தொண்டையைச் செருமிக் கொண்டு தீர்ப்பைப் படிக்க ஆரம்பித்தார்.

''இது ஒரு அசாதாரண வழக்கு — குற்றம் சாட்டப்பட்டவர் தான் திட்டமிட்டுக் கொலை செய்ததாக ஒப்புக்கொள்கிறார். இதற்குத் தூக்குத் தண்டனையோ ஆயுள் தண்டனையோ கொடுக்கலாம். ஆனால் நான் அப்படித் தீர்ப்பளிக்கப் போவதில்லை. இதை நான் வேறு முறையில் அணுகியிருக்கிறேன். இந்தத் தீர்ப்பு ஒரு நீதிபதியின் மனம் திறந்த வாக்குமூலமும் கூட...

''நான் பல வருஷங்களாக வக்கீலாக இருந்தேன்... என் சட்ட ஞானம் எவ்வளவோ குற்றவாளிகளைக் காப்பாற்றி யிருக்கிறது. ஏனென்றால் வக்கீலாக இருந்த என்னை அண்டி வந்த —கட்சிக்காரர்களைக் காப்பாற்றுவதும் — வழக்கில் ஜெயிப்பதுமே என் தொழில் தர்மம் என்று நான் நம்பினேன். இப்போது நினைத்துப் பார்க்கிற போது சங்கடமாகவே இருக்கிறது. குற்றவாளிகளைத் தப்புவிக்கவா நான் சட்டம் பயின்றேன் — என்னைப் போன்று எவ்வளவு வக்கீல்கள் — அவர்களும் அப்படித்தானே செய்தார்கள் — செய்தார்கள் என்றால் என்ன அர்த்தம்... செய்ய முடிந்தது... செய்ய முடிகிற அளவுக்குச் சட்டத்தில் ஓட்டைகள் இருந்தன. இருக்கின்றன என்றுதானே அர்த்தம்... அதனால்தான் அவர்களால் — என்னால் அப்படிச் செய்ய முடிந்தது.

''இந்த இளைஞனின் வழக்கு ஒரு சமுதாயத்தின் குரல் என்று அவன் சொன்னதை நான் யோசித்துப் பார்க்கிறேன். — அது உண்மை என்றே உணர்கிறேன்.

''சீனிவாசனின் கடந்த கால வாழ்க்கை முழுவதுமாக நான் விசாரித்துப் பெற்றிருக்கிறேன். அவர் கட்டுப்பாடுள்ள கான்வென்டில் படித்து, பின்பு தரமுள்ள கல்லூரி ஒன்றின் மூலம் படித்துப் பட்டம் பெற்றிருக்கிறார் — அமைதியானவராக — புத்திசாலித்தனமானவராக எப்போதுமே இருந்திருக்கிறார். எந்த விதமான கிரிமினல் ரெகார்டும் அவர் மீது கிடையாது. சமுதாயத்தில் தவறிழைக்கப் பிரியப்படாத தரமான ஒரு பிரஜையாகவே அவர் இருந்திருக்கிறார்.

''மாறாக ராஜூவை நான் கோர்ட்டுகளிலும் பலர் வாயாலும், போலீஸ் ரெகார்டுகளின் மூலமாகவும் அறிவேன் — அவர் ஒரு பயங்கரவாதி — சமுதாயத்தின் அவமானச் சின்னம், உண்மையில் ஆளில்லாத ஒரு தீவுக்கு நாடு கடத்தப்பட வேண்டியவர்.

''எந்த நாளிலும், எந்த வன்முறையிலும் ஈடுபட்டிராத சீனிவாசன் ஒரு கொலை செய்திருக்கிறார் — ஏதனால் — அவருக்கு நீதி மறுக்கப்பட்டிருக்கிறது — அவருக்கு ஏற்பட்டிருக்கிற இன்னல்கள் உண்மையானவை அதை ஏற்படுத்தியவர்கள் தப்பியிருக்கிறார்கள். — நம் சட்டங்களால் தவறு செய்கிறவர்கள் எல்லோரையும் தண்டிக்க முடிந்ததில்லை என்பதை நான் என் அனுபவத்தில் கண்டிருக்கிறேன். சீனிவாசன் ஒரு சாட்சி சொல்ல முயன்றிருக்கிறார். அதனால் பல இன்னல்களுக்கு ஆளாகியிருக்கிறார். சட்டம் அவருக்கு எந்தவிதத்திலும் உதவ முடியவில்லை. அப்புறம் அவர் சொல்கிற மாதிரி சட்டம் செயலற்ற தன்மைக்கு மலட்டுத்தனத்துக்கு வந்துவிட்டது என்றால் அதில் கோபப்பட ஒன்றுமில்லை. .... நாம் புண்களைப் புரையோட விட்டுக் கொண்டிருக்கிறோம். — நாற்றங்களை உள்ளே வைத்துக் கொண்டு மேல் பூச்சுக்களின் வாசனையில் நம்மை நாமே மறந்து போயிருக்கிறோம். நாம் ஆஷாடபூதிகள். மாறுதலை வரவேற்க வேண்டிய நாம் வரவிடாது தடுத்துக் கொண்டிருக்கிறோம். — இதுதானா நாகரீகத்தின் முன்னேற்றம்—

''சட்டத்தின் ஓட்டைகளால் பல குற்றவாளிகள் தப்பிப் போயிருப்பதை நானே பார்த்திருக்கிறேன். அதைக் கண்டிப்பாக அமல் செய்து நிரபராதி ஒருவனைத் தண்டிக்க நான் தயாரில்லை — என் பார்வையில் சீனிவாசன் நிரபராதியே — பத்துக் குற்றவாளிகள் தப்பினாலும் ஒரு நிரபராதி தண்டிக்கப்படக் கூடாது என்பதே சட்டத்தின் கருணை... ஆகவே நான்...''

சாயிநாதன் வாசிக்கிற தீர்ப்பை அங்கிருக்கிற வக்கீல்கள் ஆச்சரியத்தால் விரிந்த கண்களுடன் பார்த்து மலைத்துப்போய் உட்கார்ந்திருக்கின்றனர்... அவர் எதையும் சட்டை செய்யாமல் நிஷ்களங்கமாகத் தம் தீர்ப்பை வாசித்துக் கொண்டே போகிறார். சட்டம் அவரையும் ஒரு குற்றவாளியாக— சட்டங்களின் வரைமுறையைத் தாண்டிவிட்ட ஒரு உத்தியோகஸ்தராகக் கொண்டு தண்டிக்கக் கூட ஆயத்தமாகலாம்...அதனால் என்ன — சிலுவையில் அறையப்படுகிற எல்லோருமே திருடர்கள் அல்லவே!

விடை :

பிரதமர் இந்திரா காந்தியே தான். அண்மையில் ஒரு நாள் டில்லி பிர்லா மந்திருக்கு அதிகாலையில் ஆண்டவனைத்தரிசிக்க வந்தார் பிரதமர். அப்போது இந்துஸ்தான் டைம்ஸ் புகைப்படக்காரர் வீரேந்திர பிரவாகரது காமிராவில் சிக்கிக்கொண்டார்.

-எஸ். சந்திரமௌளி

நன்றி: சன்டே



# உங்கள் கேசம் அடர்த்தியின்றி சக்தியின்றி இருக்கிறதா? உங்கள் கேசத்தைப் பக்குவப்படுத்தி அழகையும் ஆரோக்கியத்தையும் அளிக்கிறது...




**செழுமையான புரதப்போஷாக்கு நிறைந்த**

## ஹேலோ எக் ஷாம்பூ

ஊட்டம் குறைந்த நிலையில் உங்கள் கேசம் அடர்த்தி யின்றியும், சக்தியின்றியும், ஆரோக்கியமின்றியும் காணப்படுகிறது.

பட்டுப்போன்ற, பொன் நிறமுள்ள வழவழப்பான ஹேலோ எக் ஷாம்பூ செழுமையான புரத ஊட்டம் நிறைந்த உத்தியின் மூலம் உங்கள் கேசத்தை சீராகப் படியவைத்து அதற்குத் தேவையான எல்லா ஊட்டங்களையும் அளிக்கிறது. உங்கள் கேசம் அழகாக ஆரோக்கியமாக, அடர்த்தியாகத் திகழ்கிறது.

ஹேலோ எக் ஷாம்பூவின் செழுமையான நுரைவளம் உங்கள் கேசத்தில் புகுந்து அதை பொலிவுடனும் தூய்மையான பளபளப்புடனும் திகழச் செய்கிறது.

**ஹேலோ எக் ஷாம்பூ ...**

**அழகிய அடர்த்தியான ஆரோக்கியமான கேசத்திற்கு**

HES. G. 4. TM

# டான்சி

## அளிக்கும் மகத்தான பண்டிகைக் கால தனிச் சலுகை!



**5% முதல் 25% வரை**

**சிறப்புத் தள்ளுபடி**

எஃகு மற்றும் மரத்தினாலான மேசை, நாற்காலி, சோபா செட்டுகள், கட்டில்கள், பீரோக்கள், டைனிங் செட்டுகள், டிரஸ்ஸிங் டேபிள்கள் போன்ற பல வகைகள் மீது

அக்டோபர் 1 முதல் 25 தேதி வரை கையிருப்புத் தீரும் வரை மட்டுமே அளிக்கப்படும்.

உடனே முந்துங்கள்.



**வெகுமதியும் உண்டு.**

**டான்சி**

எஃகு மற்றும் மர பர்னிச்சர்: டான்சி விற்பனை நிலையம், சென்னை–600 014, சென்னை–600 006, மதுரை-625 002, கோயம்புத்தூர்-641012 மற்றும் திருச்சி-620 002.
(ஞாயிறன்றும் விற்பனை உண்டு)

எஃகு பர்னிச்சர்: டான்சி பர்னிச்சர் தொழிற்சாலை, வேலூர், பழனி மற்றும் இராசபாளையம்

மர பர்னிச்சர்: டான்சி பர்னிச்சர் தொழிற்சாலை, கிண்டி, கிருஷ்ணகிரி, மதுரை, புதுக்கோட்டை, பொள்ளாச்சி, கடலூர், மன்னார்குடி, பேட்டை மற்றும் சேலம்.

# சாதிக்கு ஒரு நீதி

கோமல் ஸ்வாமிநாதனின் "செக்கு மாடுகள்" தான் இந்த "சாதிக்கொரு நீதி". பெரிய பண்ணையைக் கொன்றுவிட்டு சிறையில் வேதம், உபனிஷத் முதல் காந்தியம், மார்க்ஸிஸம், வரை பயின்றுவிட்டு வெளியே வரும் ஹரிஜன் காடனுக்கு (விஜயகாந்த்) அவன் ஊரிலேயே விவசாயம் புரிய ஒரு ஊசி முனை நிலம்கூட மறுக்கப்படுகிறது. பண்ணையார்கள் தொழிலாளிகளுக்குக் கொடுக்கும் கூலியோ, அரசு நிர்ணயித்ததில் பாதி: போதாததற்கு நஞ்சை நிலத்தில் கலை அழைத்து வந்து சவுக்கு நடுகிறார்கள். பிராமண ஹார்மோனியமும் ஹரிஜனப் பறையும் சேர்ந்தொலித்து சங்கம் சேர்த்துத் தொழிலாளிகள் கிளர்ச்சி செய்ய, போலீஸ் குண்டடி பட்டு காடன் இறக்க, ஃபோனிக்ஸ் பறவையின் சாம்பலில் இருந்து எழுந்த புதிய பறவைகளாய் பிராமணப் பெண்ணும் (கவிப்ரியா), ஹரிஜன வாலிபனும் (சக்ரவர்த்தி) போராட்டத்தைத் தொடரப் படம் முடிகிறது.

பிராமணர்களா யிருந்தாலும் ஹரிஜனங்களா யிருந்தாலும், அவர்களுக்குள்ளேயே ஏற்படும் வர்க்க பேதம் வறியவர்களை ஒன்று சேர்க்கிறது என்பதே இதன் நீதி.

சிறப்பு அம்சம் வசனம். நீண்டிருந்தாலும் கூட அனாவசியமாய் ஒரு வரி கிடையாது. கோமலின் பேனா பல பிரச்னைகளை விவாதிக்கிறது. குமுறுகிறது, சாடுகிறது. கேலி செய்கிறது. ("ஏர் பிடிக்கத் தெரியாத பண்ணையாருகளெல்லாம் விவசாயின்னு சொல்லிட்டு சங்கம் வெக்கிறாங்க....")

நடிகர்கள் அனைவரும் அளவு தெரிந்து அழகாக நடிக்கிறார்கள். அப்புறம்... நாகேஷ்! வெள்ளையுள்ளமும் புரட்சிச் சிந்தனையும் உடைய புரோகிதராய் வந்து, "மணியாச்சிலே ஆஷ் துரையைச் சுட்டுக் கொன்னுனே வாஞ்சிநாதன்னு ஒரு ஐயர், அவன் பேரண்டா நான்" என்று ஆர்ப்பரிக்கும்போதும், தொழிலாளர் கிளர்ச்சியைக் கண்டு, "மாகாளி பராசக்தி கடைக்கண் வைத்தாள். ஆகாவென்றெழுந்தது பார் யுகப் புரட்சி" என்று மெய்சிலிர்த்துப் பொங்கும்போதும், கொள்ளையடிக்கிறார் மனசை.

பாடல்கள் சிந்திக்க வைக்கின்றன. துளி ஆபாசமில்லாமல் படத்தை இயக்கிய எஸ். சங்கரனும், காமிராவை அழகாகக் கையாண்டிருக்கும் எம். கேசவனும் பாராட்டுக்குரியவர்கள்.

படத்தின் பெருங் குறை க்ளைமாக்ஸ். எந்தக் கட்சி வர்ணமும் இல்லாமல் போய்க் கொண்டிருந்த படத்தில் கடைசியில் சர்வகட்சிக் கொடிகளும் (ஜனதா, இந்திரா காங்கிரஸ் உட்பட) ஏந்திக்கொண்டு தொழிலாளிகள் ஊர்வலமாய் வருவதும், விதம் விதமாய்த் தொப்பி அணிந்த போலீஸ்காரர்கள், மரத்தில் செய்த பொம்மைத் துப்பாக்கிகளால் டுய் என்பதற்குள் சுட்டுக் கொல்வதும் அபத்தம். படத்தின் வெற்றி தோல்வியை இந்தக் க்ளைமாக்ஸ்தான் நிர்ணயிக்கப் போகிறது என்பதால் வருத்தமாய் இருக்கிறது.

—"சிந்து-ஜீவா"

# தீக்குளிப்பு ஒரு தீர்ப்பு

கலைஞர் மு. கருணாநிதி கைது செய்யப்பட்டதை யொட்டிப் பலர் தீக்குளித்தனர். இவர்கள் இப்படித் தங்களைத் தாங்களே அழித்துக் கொள்வதற்கான காரணங்கள் என்ன? மனோதத்துவ நிபுணரான டாக்டர் சக்திவேல் கூறுகிறார்: சம்பந்தப் பட்டவரை நான் பரிசோதித்தால் அவரைப் பற்றி பல விவரங்களை அறியலாம். இப்போதோ பத்திரிகைச் செய்திகளைப் படித்த அளவில் தான் என்னால் பேச முடியும். பொதுவாகச் சில கருத்துக்களைச் சொல்கிறேன். தன்னைத் தானே அழித்துக்கொள்வதால் எடுத்துக் கொண்ட பிரச்னைக்குத் தீர்வு ஏற்படுமானால் அதில் அர்த்தமிருக்கிறது. ஜப்பானில் உயர் குலத்தவர் தங்களுக்கு இழிவு ஏற்பட்டுவிட்டால் ஹராகிரி செய்வார்கள். ஆயிரக்கணக்கானோர் முன்னிலையில் கூரிய வாளின் மீது விழுந்து குடல் சரிய மடிவார்கள். இது அங்கு மிகப் பெரிய சடங்காகவே நடக்கும். ஹராகிரி என்பதற்குச் சந்தோஷமான வழியனுப்புதல் என்று அர்த்தம். நோபல் பரிசு பெற்ற ஒருவர்கூட ஹராகிரிசெய்து கொண்டிருக்கிறார்.

ஆனால் இங்கு தலைவருக்கோ, தங்களுக்கோ எந்த விதமான இழிவும் ஏற்படாதபோது, எந்தப் பிரச்னைக்கும் இதனால் தீர்வு ஏற்படாதபோது சிலர் தங்களைத் தாங்களே தீக்கிரையாக்கிக் கொண்டு மடிகிறார்கள் என்றால் அப்படி மாண்ட மனிதர்கள் மனத் தளவில் அறிவு முதிர்ச்சி அடையாதவர்களாக இருக்க வேண்டும் என்ற சந்தேகம் எழுகிறது. இதனைச் செய்பவர்கள் சிந்தித்துச் செயல்படுபவர்களாகத் தெரியவில்லை. இப்படிப் பட்ட முடிவுகள் எல்லாமே ஒரு நொடியில் எடுக்கப்படுகிறவை தானே!



டாக்டர் சக்திவேல்

தீக்கிரையான ஒரு மனிதருக்கு ஏகப் பட்ட கடன்கள் இருக்கிறதாம். கடன் தொல்லையால் தற்கொலை செய்து கொண்டான் என்ற அவப்பெயரை விடத் தலைவருக்காக உயிர்த் தியாகம் செய்தான் என்கிற பெருமை நிற்குமல்லவா?

இந்தச் சமயத்தில் தீக்குளித்தால் நாம் ஹீரோவாகலாம். நம்மைப் பற்றிப் பத்திரிகைகள் எழுதும். படங்களைப் பிரசுரிக்கும் என்ற ஆசையில் கூடச் சிலர் செய்யக் கூடும்.

கட்சியின் தலைவர் நம் வீட்டுக்கு வருவார், நம் குடும்பத்துக்கு ஆறுதல் கூறிப் பண முடிப்புத் தருவார் என்று நினைத்துச் செய்வோரும் உண்டு.

இந்தத் தேதியில், இந்த இடத்தில் இந்தக் காரணத்துக்காக நான் தீக்குளிக்கப் போகிறேன் என்று அறிவித்துவிட்டுக் குறிப்பிட்ட நேரத்துக்கு அங்கு சென்றாலே போதும். போலீஸ் அவர்களைக் கைது செய்து அழைத்துக்கொண்டு போய்விடும். தீப்புண்ணோ காயமோ ஏதும் ஏற்படாமலேயே பிரபலமடையலாம். இந்த விதமான விளம்பரம் தேடுவோரும் உண்டு.

எங்கு யார் தீக்குளித்தாலும் அவர் எங்கள் கட்சியைச் சேர்ந்தவர்தான் என்று உரிமை கொண்டாடக் கட்சித் தொண்டர்கள் இராப்பகலாக அலைகிறார்கள் என்பதைப் பார்க்கும்போது இது தியாகமே அல்ல என்றுதான் சொல்லத் தோன்றுகிறது.

விளம்பரத்துக்காகத் தன்னை அழித்துக்கொள்வது 50 சதவிகிதமென்றால் சொந்தப் பிரச்னைகள் காரணமாகத் தன்னை அழித்துக் கொள்வது 49 சதவிதம். உண்மையாகவே தலைவருக்கு ஏதோ நன்மை செய்வதாக நம்பித் தன்னை அழித்துக் கொள்வதென்பது ஒரு சதவிதமோ அல்லது அதற்கும் குறைவாகவோதான் இருக்கும். பேட்டி: சலன்





[கல்கி வெள்ளி விழா சிறுகதைப் போட்டியிலும், அமெரிக்கப் பல்கலைக் கழகமான பெர்க்லியுடன் கல்கி நிறுவனம் இணைந்து நடத்திய சிறுகதைப் போட்டியிலும் பரிசுகள் பெற்றவர் திருமதி பத்மாவதி. இவை தவிர, கல்கியில் பல்லாண்டுகளாகப் பல சிறுகதைகளை எழுதி வந்துள்ள இவர் உடலழகுடன் போட்டி போடுகிற மன அழகு உடைய குணவதி. அடக்கமாகவும் மிருதுவாகவும் பேசும் இயல்புடைய இவர், குடும்பச் சூழ்நிலையில் தோன்றுகிற பல பிரச்னைகளையும் மன உணர்ச்சிகளையும் ஆடம்பரமற்ற எளிய நடையில் துல்லியமாகப் படம் பிடித்துக் காட்டும் வல்லமை படைத்தவர். நவீனமான நகைச் சுவைக் கதைகள் பலவும் எழுதியுள்ளார்.

விடுதலைப் போராட்ட காலத் தியாகி கோவை சுப்ரி அவர்களின் திருமகள்; புகழ்பெற்ற டாக்டர் திருமூர்த்தி அவர்களின் மருமகள். கணவர் டி. டி. கிருஷ்ணமூர்த்தியையும் மகனையும் மகளையும் விட்டுப் பிரிந்து அண்மையில் திடுமென இறைவனடி சேர்ந்தார் பத்மாவதி. அவர் எழுதி வைத்திருந்த, இது வரை பிரசுரமாகாத ஒரு சிறுகதையை இங்கு வெளியிட்டு அஞ்சலி செலுத்துகிறது கல்கி. இதைப் படிக்கும் போது, பத்மாவதியின் மறைவையும் மறந்து சிரிப்போம்.

இதைவிடவும் பத்மாவதிக்குப் பெருமை தரக்கூடிய விஷயம் வேறென்ன?

-ஆசிரியர்]

# ஷேவோ... ஷேவிங்!

"வெந்நீர்... வெந்நீர்...வெந்நீர்...!"

..............

"ஓ...! இந்த வீட்டில் யாருக்கும் தமிழ் தெரியாதோ!" என்ற கூச்சலுடன் "ஹாட் வாட்டர்.... ஹாட் வாட்டர்..." என்று பெரும் குரல் எடுத்துக் கத்தியும் யாரும் காதில் போட்டுக் கொள்ளாமல் இருக்கவே, ஆத்திரத்துடன் ஷேவிங் கப்புடன் சமையலறையில் நுழைந்தான் ராகவன்.

அடுப்பின் மேல் வெண்கலப் பானையில் தண்ணீர் பொங்கி ஆவி வந்து கொண்டிருந்தது. ஆத்திரம் பொங்க... ஷேவிங் கப்பை அதில் 'லொடக்' என்று அமிழ்த்தி வெந்நீர் எடுத்தான்.

"ஐயோ... அநியாயமே! இப்படியும் உண்டா? உலை கொதிக்கிறது... அரிசியைக் களைந்து வரப் போனேன்... ஷேவிங் கிண்ணத்தைக் கொண்டு வந்து வெண்கலப் பானைத் தண்ணீரில் முக்கியாச்சா? இனிமேல் உங்கள் ஷேவிங் அமர்க்களம் ஆரம்பமா? கடவுளே....!" சீதை உச்சஸ்தாயியில் கத்தினாள்.

"பின்னே தொண்டை கிழியக் கிழிய எவ்வளவு நேரம் கத்தறது... வெந்நீருக்காக! யார் காதிலாவது விழுந்ததா? நான் எப்பொழுது ஷேவிங் முடித்து... குளித்து... சாப்பிட்டு ஆபீஸ் கிளம்பறதாம்...?" என்று ராகவனும் கட்டைக் குரலில் கத்தினான்.

"ஷேவிங் முடிச்சுக் குளிப்பீங்க... சாப்பிடுவீங்களா நேரத்தோடு என்பது சந்தேகம்தான்..." என்று பொரிந்து தள்ளிவிட்டுச் சீதை ஆத்திரத்துடன் 'நங்'கென்று, வெண்கலப்பானையை அடுப்பிலிருந்து இறக்கி, கொதி நீரைத் தொட்டியில் கொட்டினாள்.

"சீதே....! சீதே....! சித்தே... இப்படி" என்று ராகவன் பணிவாகக் கூப்பிட்டது ஒன்றும் அவள் காதில் விழவில்லை.

ராகவன் குரல் ஏன் திடீரென்று குழைந்தது என்று கேட்கிறீர்களா? அந்தச் சனியன் பிடித்த அலுமினிய ஷேவிங் கப் வெந்நீருடன் அவன் கையைச் சுட்டுத் தொலைக்க... சீதை பானை வெந்நீரைக் கீழே கவிழ்ப்பதற்கு முன்பே அவன் தன் கிண்ணத்தில் உள்ளதைக் காலில் கவிழ்த்துக் கொண்டு நடனமாடிக் கொண்டிருந்தான். அத்துடன் தட்டுத் தடுமாறி அந்தக் கிண்ணத்தைக் கையில் எடுத்து, கீழே கொட்டும் வெந்நீரைக் கிண்ணத்தில் விடு என்று சொல்லத் தெரியாமல் காலெரிச்சலுடன் தவித்ததன் பலன் தான் அவன் குரலின் மாற்றம்.

பானையைக் காலி செய்த பின் திரும்பிப் பார்த்த சீதை "அடராமா! அதுவுட போச்சா... நல்ல வேணும்" என்று இரக்கமற்ற குரலில் கூறிக்கொண்டே தண்ணீரைக் கொட்டி வெண்கலப் பானையை அடுப்பில் வைத்து விட்டு "சரி போய்க் குளிக்கும் அறையில் பாய்லரில் வெந்நீர் எடுத்துக் கொள்ளுங்கள்" என்று விரட்டி அடித்தாள்.

கால் எரிச்சலுடன் குளியலறையை நோக்கி ஓடினான் ராகவன். பாதி வழியிலேயே... கீச்சுக் குரலில் சினிமாப் பாட்டு காதைத் துளைக்கவும், அவன் செயலிழந்து நின்று விட்டான். அவன் அருமை மகள்



மாதங்கி குளியலறையில் புகுந்தால் குறைந்தது பத்துப் பாட்டுக்களாவது பாடி முடித்த பிறகுதான் வெளியே வருவாள். இப்பொழுது தானே முதல் பாட்டுக் கிளம்புகிறது!

வேண்டா வெறுப்பாகத் தண்ணீரைக் கிண்ணத்தில் நிரப்பிக்கொண்டு ''அப்பனே முருகா!... ஈரேழு ஜென்மத்துக்கும் ஆண் ஜென்மமே வேண்டாம்!'' என்று அலுத்துக்கொண்டே ஷேவிங்செய்ய மேஜை முன் உட்கார்ந்தான்.

ராகவனுக்குப் பிடிக்காத விஷயம் ''ஷேவிங்''. அதுவும் வெந்நீர் இல்லாத 'ஷேவிங்'... சந்தர்ப்பம் நேர்ந்தால் இன்று வெள்ளிக் கிழமை... அமாவாசை, கிருத்திகை... என்ற சாக்குடன் நான்கு ஐந்து நாட்கள் தாடி வளர்க்கவும் தயங்க மாட்டான். இந்த ஒரு தொல்லைக்காகத்தான் முன் காலத்தில் பலர் உலகை வெறுத்து சந்நியாசம் வாங்கிக் கொண்டு 'ஹாய்யா'கத் தாடி வளர்த்தார்கள் என்பது ராகவனின் அசைக்க முடியாத அபிப்பிராயம்.

சோப்பைக் குழைத்து முகத்தில் பூசியாகி விட்டது... பிளேடைக் காணோம்...!

''அட சட்...! இதுவும் ஒரு வீடா...! மனுஷன் ஷேவ் செய்யற பிளேடைக்கூடக் காணுமல்...'' என்று அவன் கத்தவும்...

''அட ராமச்சந்திரா...! ஆரம்பிச்சாச்சா உங்க ரகளே! அடியே மாலா... மாதங்கி...



கிட்டு... பட்டு... யாருமே அப்பாவுடைய பிளேடை எடுத்தீங்க...? கொண்டு வந்து கொடுங்கள்'' என்று சீதை ஓர் அதட்டல் போடவும் கிட்டு சிட்டுப்போல் பறந்துவந்து பிளேடை மேஜை மேல் வைத்தான்.

ராகவன் அதை எடுத்துப் பொருத்தி 'வரக்...வரக்' என்று நாலு தடவை இழுத்தும் பிரயோசனமில்லாமல் போகவே ''என்ன அநியாயம்! ஒரு பிளேடை ஒண்ணரை ரூபாய் கொடுத்து வாங்கினேன்... இருபத்தைந்து ஷேவிங்குக்கு வரும்...பிரான்ஸிலிருந்து ஸ்பெஷலாக வந்ததுன்னு கணேசன் கொடுத்தான்... இரண்டு ஷேவுக்குக் கூட வரல்லியே... மொண்ணையாயிடுத்தே! எடுத்துத் தலையைச் சுற்றி எறியத்தான் வேணும்...'' என்று அங்கலாய்த்தான்.

''அப்பா...அப்பா... எறியா தேப்பா.... எனக்குக் கொடுப்பா... நேத்து பாதி மாங்காய் நறுக்கறதுக்குள்ளே கிட்டு பிடுங்கிண்டுட்டான்... பென்சில் சீவ...!'' என்று அவன் பெண் பட்டு கையை நீட்டிக்கொண்டு ஓடிவந்தாள்.

ராகவன் திடுக்கிட்டான். இருபத்தைந்து ஷேவுக்கு வரவேண்டிய பிளேட் ஏற்கனவே முப்பது ஷேவுக்கு உபயோகமாகி விட்ட விஷயம் பிறகுதான் தெரிய வந்தது.

மனைவி வாழை இலை நறுக்கவும் மகன் பென்சில் சீவவும், மகள் மாங்காய் நறுக்கவும், வேலைக்காரி தென்னந் துடைப்பம் சீவவும், தோட்டக்காரன் ரோஜாச் செடியைப் பதியன் போடவும்... இப்படியாக... அவன் பிளேட் உபயோகப்பட்ட விஷயம் ஒவ்வொன்றாக வெளிவர.. முகத்தில் சோப்பு நுரையுடன் தலையில் கையைவைத்து உட்கார்ந்து விட்டான் ராகவன்.

அந்தச் சமயம் பார்த்து கிட்டு ''அப்பா....எனக்குப்பா பிளேடு..'' என்று பட்டுவுக்குப் போட்டியாகக் கையை நீட்டவும் ''ஏண்டா தடியா! புதுப் பிளேடை எடுத்துப் பென்சில் சீவலாமா?'' என்று ராகவன் தலைமேல் இருந்த கையை எடுத்துக் கிட்டு தலைமேல் ஓங்க... ''இல்லேப்பா! நான் பென்சில் சீவிட்டு அலம்பி... துடைச்சுத்தான் வைச்

சேன்... பட்டுதான் நேற்று மாங்காயை நறுக்கிட்டு அலம்பாமல்...'' என்பதற்குள் பட்டு குறுக்கிட்டு ''பொறாமை பிடிச்சவன்! நேற்று மாங்காய் நறுக்கினதில் பங்கு தரலேன்னு கோபம்... கோள் குத்தறான்'' என்று கிட்டு மேல் பாய்ந்தாள்.

அவர்கள் சண்டையை விலக்கி வேறு புது பிளேட் வாங்கிவரக் கிட்டுவைக் கடைக்குத் துரத்தினான் ராகவன்.

மேஜை மேல் உள்ள புத்தகத்தில் கண்ணாடியைச் சாய்த்து நிறுத்தி, தண்ணீர்க் கிண்ணத்தை வேண்டா வெறுப்பாகத் தூக்கி அருகில் வைத்துக் கொண்டு புது பிளேடில் 'ஷேவிங்' ஆரம்பமாயிற்று. பட்டு நெருங்கி உட்கார்ந்து ராகவனின் முகத்தையே உற்றுப் பார்த்தாள். பிறகு ''ஏம்பா... இன்னும் ரத்தம் வரலையே... இந்த பிளேடும் மொண்ணையா?'' என்று கேட்டாள்.

தான் ரத்தம் சொட்டச் சொட்ட 'ஷேவ்' செய்துகொள்ளும் விஷயம் குழந்தைகளுக்குக் கூடத் தெரிந்திருக்கிறதே என்ற ஆத்திரத்தில் ராகவன் 'வரக்' என்று கன்னத்தில் இழுக்க ''ஹையய்யா! ரத்தம்... ரத்தம்... கிட்டு ஓடிவா! ஓடிவா...'' என்று பட்டு கத்தக் கத்த ராகவன் ஆத்திரம் தாங்காமல் 'வரக்...வரக்...சரக்...சரக்' என்று இழுக்கவும் அடுத்த இரண்டாவது நிமிடம் வீடே கூடிவிட்டது அவனைச் சுற்றி.

''கண்றாவி... கண்றாவி...! இப்படியும் ஒரு மனுஷரா! ஊருலே உலகத்திலே யாரும் ஷேவ்பண்ணிக்கிறதில்லையா...'' சீதை 'டெட்டாலு'ம் பஞ்சும் எடுத்துக்கொண்டுவந்தாள்.

பியூன்: ''மானேஜர் உங்களிடம் கேட்டுட்டு வரச்சொன்னார்!''

கிளார்க்: ''என்னப்பா கேட்டுட்டு வரச்சொன்னார்?''

பியூன்: ''நீங்க பல் குத்திட்டிருக்கிறது சொந்தக் குண்டூசியா? ஆபீஸ் குண்டூசியான்னு!''

- உ. ராஜாஜி

''எல்லாம் உன்னால் வந்த வினைதான்... வெந்நீர் போட்டுத்தரக்கூட துப்பில்லாத ஜென்மம்...'' என்று தன் ஆத்திரம் முழுவதையும் சீதைமேல் பாய்ச்சி ராகவன் கத்தி முடித்துத் திரும்பிப் பார்த்தபோது கிட்டு தன் முகம் முழுவதும் பிரஷ்ஷிலிருந்த சோப்பு நுரையைப் பூசிக்கொண்டு தன் அருமைத் தங்கை பட்டுவுக்கும் பூசிவிட்டுக் கொண்டிருந்தான். இதில் மட்டும் இருவருக்கும் வெகு ஒற்றுமை!

''ஐய்யய்யோ! என் புஸ்தகமெல்லாம் போச்சே... என் டேபிள் மேல் உட்கார்ந்து 'ஷேவ்' செய்துக்க வேண்டாம்னு சொன்னால் கேட்டால்தானே...!''

சோப்பு நுரை கலந்த தண்ணீர் மேஜை மேல் கொட்டி வழிந்தோடுவதைப் பார்த்து, பத்துப் பாட்டுக்கள் பாடி முடித்துக் குளியலறையை விட்டு அப்பொழுதுதான் வெளியில் வந்த மாதங்கி கண்களைக் கசக்கினாள்.

''இதுக்குத்தான் 'எலெக்ட்ரிக் ஷேவர்' வாங்கிக்கொள்ளுங்கள் என்றேன். இந்த வெட்டும் ரத்தமும்,... கத்தலும் கூச்சலும் இல்லாமல் இருக்குமல்லவா!'' என்று சீதை குற்றம் சாட்டவும்... அந்த நிலையிலும் ராகவனுக்குச் சிரிப்பு வந்தது.

போன ஞாயிற்றுக் கிழமை 'கிராப்' வெட்டிக்கொள்ள சலூனில் காத்திருந்த வேளை, அவசரமாக முகத்தை மறைத்துக் கொண்டு டாக்ஸியில் வந்து இறங்கிய நண்பர், மின்சாரம் திடீரென்று நின்றுவிட்ட காரணத்தால் 'எலக்ட்ரிக் ஷேவர்' வேலை நிறுத்தம் செய்ய, பாதி ஷேவில் பதறியடித்துச் சலூனுக்கு வந்த விஷயத்தைக் கூறினாரே அதை அறிந்தால் சீதை 'எலெக்ட்ரிக் ஷேவர்' சமாசாரத்தையே எடுக்க மாட்டாள் என்று எண்ணிப் பக..பக.. வென்று சிரித்தான்.

''என்ன சிரிப்பு வேண்டிக் கிடக்கு... இப்போ!'' என்று சீதை கடுகடுக்கவும்... ''இல்லை சீதை! எலக்டிரிக் ஷேவர் விலையைக் கேட்டால் என் தலையே தானாக 'ஷேவா'கி விடும்.'' என்று கூறிக்கொண்டே அவசர அவசரமாக எரியும் முகத்துடன் குளியலறையை நோக்கி ஓடின ராகவனுக்கு ''அப்பாடா! நாளை மறுநாள்—வரை நிம்மதி...'' என்று பெருமூச்சு எழுந்தது.

''சாருக்கு இன்னிக்கு 'ஷேவிங் டே' போல இருக்கு!'' என்ற இடக்குப் பேச்சை ஆபீஸில் வேறு கேட்க வேண்டுமே! என்ற எண்ணத்தினால் ஏற்பட்ட எரிச்சலுடன் குளியலறைக் கதவைப் 'படா'ரென்று மூடினான்.

''உங்கள் கோபத்தைக் கதவு மேல் காட்டாதீர்கள். கதவு பத்திரம்... பத்திரம்!'' என்று வழக்கம்போல் கிண்டலாகச் சீதை குரல் கொடுக்கவும் ராகவனும் வழக்கம் போல ''அடுத்த ஜன்மத்துலே ஆணாகப் பிறந்து ஷேவிங் தொல்லையை அனுபவித்து... நீ கத்தக் கத்த... நான் பார்த்துச் சிரி... சிரின்னு சிரிக்கணும்... அதுதான் என் ஒரே ஆசை....'' என்ற சாபத்துடன் தண்ணீரை எடுத்துத் தலையில் கொட்டிக் கொண்டான்.

# பிரகாசமான உங்களது நாளை



# இன்றைய சேமிப்பே அதன் அடிப்படை

வாழ்வின் வளமைக்கு அவசியமான அடிப்படைத் தேவைகளில் சேமிப்பும் ஒன்று. திட்டமிட்டுச் சேமிப்பதன் மூலம் அன்றாட வளமையையும் ஓய்வுகாலப் பாதுகாப்பையும் அடையமுடிகிறது. உங்களது நோக்கங்களைச் சுலபமாகப் பூர்த்திசெய்துகொள்ளவே பல திட்டங்களை கேஸியுபி தன்னிடத்தே வைத்துள்ளது. மேலும் உங்களுக்கு அவசரத்தேவைகள் ஏற்படும்போது கடனுதவியும் அளிக்க முன்வருகிறது.

**கேஸியுபி-உங்கள் தேவை/சேமிப்புக்கு உதவும் உற்ற நண்பன்.**

**77 வருட சீரிய வங்கி சேவை**

## தி கும்பகோணம் ஸிடி யூனியன் பாங்க் லிட்,

பதிவு அலுவலகம்: கும்பகோணம்–612 001.

APRC 161

# பொன்மனச் செம்மலும் பொன்விழா ஆண்டும்

## வித்துவான் வே. லட்சுமணன்

9

திருவள்ளுவர் உரைத்தது போல், 'இதனை இவன் முடிப்பான் என்று அறிந்து அதனை அவனிடம் ஒப்படைப்பதே திறமை' என்ற வகையில் செயலாற்றும் சிறப்பு மக்கள் திலகம் அவர்களிடம் உண்டு.

திரு சித்ரா கிருஷ்ணசாமி உலகம் சுற்றியவர். சினிமாத் தொழில் துறையில் பல்லாண்டுகளாகத் தொடர்புடையவர். அனுபவம் நிறைந்தவர். பொதுவாக வெளி நாடுகளில் படம் எடுப்பதென்றால், தயாரிப்பாளர்கள் திரு சித்ரா கிருஷ்ணசாமியை அணுகுவார்கள்.

வெளி நாட்டுப் படப் பிடிப்பு என்றால், எத்தனையோ 'சடங்குகள்' கவனிக்கப்படவும், நிறைவேற்றப்படவும் வேண்டுமல்லவா! அவை அனைத்தும் தெரிந்தவர் அவர்.

மக்கள் திலகம் திரு கிருஷ்ணசாமி அவர்களிடம் உலகம்சுற்றும் வாலிபன் படத்துக்கான சில பணிகளை ஒப்படைத்தார். அவை செவ்வையாக நிறைவேற்றப்பட்டன.

ஜப்பானுக்குப் போய் அங்கே பார்க்க வேண்டியவைகளை யெல்லாம் பார்த்துச் செய்ய வேண்டிய முன்னேற்பாடுகளை யெல்லாம் செய்தவர் மணியன் அவர்கள்.

திரு மணியன் அவர்கள் உலகப் பயணம் எத்தனை தடவை செய்திருக்கிறார் என்று எண்ணிச் சொல்லிவிட முடியாது. அநேகமாக உலகம் முழுவதையும் பார்த்தவர். வெளி நாட்டு அனுபவம் என்பது அவருக்கு அமைந்த ஓர் அரிய வாய்ப்பு. மக்கள் திலகம் அளித்த பொறுப்பைச் சிறப்பாக நிறைவேற்றித் தந்த பெருமை இவருக்கு உண்டு.

திரு ஆர். எம். வீ. அவர்கள் எல்லாச் சிறப்புப் பணிகளுக்கும் மூலவர்.

எம். ஜி. ஆர். பிக்சர்ஸ் நிர்வாகியாக ஆதி முதல் செயலாற்றி வரும் கர்ம சீலரான அவர், வழக்கம் போல ''உலகம் சுற்றும் வாலிபன்'' படப் பிடிப்புக்கும் எல்லாப் பொறுப்புக்களையும் ஏற்று, ஜப்பான்

✖ 'பல்லாண்டு வாழ்க' படத்தில் லதாவுடன்



சென்று, எல்லா நிலைகளிலும் முன்நின்று ஆற்றிய பணிகள் மறக்க முடியாதவை.

இந்தப் படத்தின் சில பகுதிகள் தமிழகத்திலும் பிறகு படம் பிடிக்கப்பட்டன. வெளி நாட்டுக் காட்சிக் களங்களுடன் முழுக்க முழுக்க இணையும் வகையில் அரங்க நிர்மாணம் செய்யப்பட்ட... சிறந்ததொரு வெற்றியை என்னென்பது!

எந்தக் காரியமானாலும் சரி, உண்மையான ஈடுபாட்டுடன், அரு முயற்சி, கடுமையான உழைப்பு ஆகியவற்றைச் செலுத்திச் செய்தால் வெற்றிக்கு உத்தரவாதம் உண்டு என்கிற தத்துவத்தை நிலைநிறுத்திய படம் ''உலகம் சுற்றும் வாலிபன்''.

இந்தப் படத்துக்குப் பிறகு மேலும் பல வெற்றிப் படங்களில் நடித்தார் மக்கள் திலகம் அவர்கள்.

பட்டிக்காட்டுப் பொன்னையா, நேற்று, இன்று, நாளை, உரிமைக் குரல், சிரித்து வாழ வேண்டும் முதலியவை அவை.

இவற்றில் உரிமைக் குரல் சக்கைப் போடு போட்டது. ''சிரித்து வாழ வேண்டும்'' படம் வெற்றி பெற்றது. என்றாலும் அது மகத்தானதாக அமையவில்லை. ஆனால் இரட்டை வேடங்களில் அதி அற்புதமாகப் பொன்மனச் செம்மல் நடித்திருந்தார். டைரக்டர் எஸ். எஸ். பாலன் அவர்களின் திறமை படம் முழுவதும் சிறந்தது.

சில நேரங்கள், சில உன்னதமானபடங்கள் மகத்தான வெற்றி பெறுவதில்லை! அதற்குக் காரணமும் புரிவதில்லை. ஆனாலும் மாணிக்கம் எப்போதும் மாணிக்கம்தானே!

அடுத்து வந்த படங்கள்:

''நினைத்ததை முடிப்பவன்'', ''நாளை நமதே'', ''இதயக் கனி'', ''பல்லாண்டு வாழ்க'' ஆகியவை. எல்லாமே வெற்றி!

இவற்றில் குறிப்பாகச் சொல்லப்பட வேண்டிய படம் ''இதயக் கனி''. வழக்கம் போல், மக்கள்திலகம் அவர்களை முறையாகப் பயன்படுத்தி, மக்களிடையே அவரை வெற்றி நாயகனாக ஒளிர வைத்திருந்தார் திரு ஆர். எம். வீ. அவர்கள். இது சத்யா மூவீஸ் சார்பில் அவரால் உருவாக்கப்பட்ட திரைக் காவியம். வெற்றி முழக்கமிட்டது;

அடுத்தும் சொல்லப்பட வேண்டிய படம் ''பல்லாண்டு வாழ்க!'' சமூக மறுமலர்ச்சி கோணத்தில் வரலாற்றிலேயே ஒரு புதிய சாதனை இந்தப் படம்.

மக்கள்திலகம் சிக்கமகளூருக்குப் பக்கத்தில் உள்ள கலசாபுரம் என்ற கிராமத்தில் ஏறத்தாழ நாற்பது நாட்கள் தங்கியிருந்து, அவருடன் எல்லாக் கலைஞர்களும் உடனிருக்க உருவான படம். பிரபல இயக்குநர் கே. சங்கருக்கு இது வெற்றியைத் தந்தது.

பிரபல இயக்குநர் திரு சாந்தாராம் அவர்களின் இலட்சியப் படமான ''தோ ஆங்கே பாரா ஹாத்'' என்ற படக் கதையைத் தழுவி எடுக்கப்பட்ட படம் ''பல்லாண்டு வாழ்க''.

மூலப் படத்தின் மூலக் கதையிலே மிதந்த தத்துவத்தையும், கொள்கையையும் அப்படியே பிரதிபலித்தது இந்தத் தமிழ்ப் படம் என்றாலும், அவசியமான பல மாற்றங்கள் இதில் செய்யப்பட்டன.

தமிழகத்தில் திரு எம். ஜீ. ஆர். அவர்களின் படங்களில் எதிர்பார்க்கப்படுகிற விஷயங்கள் ஏராளம். தத்துவங்கள், கொள்கைகள், ஆகியவை , முக்கியமாகத் தேவைதான் என்றாலும் அவற்றையும் கடந்து சில காட்சிகள், சம்பவங்கள் அதிகப்படியாக இடம்பெற வேண்டிய அவசியம் உண்டு.

காதல் காட்சிகள் தேவை. ''தோ ஆங்கே பாரா ஹாத்'' படத்தில் 'காதல்' மருந்துக்குக் கூடக் கிடையாது. மக்கள் திலகம் அவர்கள் இதற்கு ஓர் உபாயம் கண்டு பிடித்தார். இயக்குநர் கே. சங்கர் அவர்களுடன் ஆலோசித்துக் கதாநாயகியின் கனவுக் காட்சிகளாகக் காதல் காட்சிகளை இடம் பெற வைத்துவிட்டார்.

வீரக் காட்சிகள் 'மக்கள் திலகம்' அவர்களின் படத்தில் இன்றியமையாதவை அல்லவா? அப்படத்தில் ஆறு சண்டைக் காட்சிகள் இடம்பெற்றன. எல்லாமே கதையோடு பொருந்தும் விதத்திலும் கதாநாயகனின் இலட்சியத்தைக் காப்பவையாகவும் அமைந்தன.

தாய்ப் பாசம், தாயின் சிறப்பு, தாய்மையின் மேன்மை போன்றவை பொன்–மனச் செம்மல் அவர்களின் படங்களில் முக்கியத்துவம் பெறக் கூடியவை. ஒரு புதிய கோணத்தில் அந்த அம்சமும் இடம் பெற்றது.

இப்படி மூலக் கதையில் இல்லாத பல முக்கியப் பகுதிகள் இணைக்கப்பட்டு முறையாக உருவாக்கப்பட்ட படம் மகத்தான வெற்றி பெற்றது. 'ஒரிஜினல்' படத்தின் இயக்குநரான திரு சாந்தாராம் அவர்களிடம் படத்தைப் போட்டுக் காட்டி, ''எப்படி வந்திருக்கிறது?'' என்று கேட்டதற்கு ஓர் உன்னதமான நற்சாட்சிப் பத்திரத்தையே அவர் வழங்கினார். ''மூலப் படத்தின் உணர்வும் ஜீவனும் தமிழ்ப் படத்தில் காக்கப்பட்டிருக்கின்றன'' என்ற கருத்தில் பாராட்டு வழங்கினார் அவர். (தொடரும்)

அவன்: ''பெட்ரோல் விலை நாளுக்கு நாள் ஏறிக்கொண்டு வருவது எனக்கு ரொம்ப கவலையைக் கொடுக்கிறது.''

இவன்: ''அட, உன்னிடம் ஸ்கூட்டரோ, காரோ கிடையாதே; பின் ஏன் கவலைப்படுகிறாய்?''

அவன்: ''என்னிடம் ஒரு சிகரெட் 'லைட்டர்' இருக்கே அது தெரியாதா உனக்கு''

செம்பூர் சந்துரு



## பாரதீய வித்யா பவனத்தின் ராஜாஜி நூற்றாண்டு விழா இலக்கியப் பரிசு

### அறநெறிகளையும், ஆத்மீகப்பண்புகளையும் வளர்க்கும் சிறந்த இலக்கியப் படைப்புகளுக்கு

### ராஜாஜி பாராட்டு – பரிசு ரூபாய் 10,000/-

தமிழ் அல்லது ஹிந்தி மொழியில் எழுதப்பட்ட கவிதை, உரைநடை நாடகம், நவீனம் ஆகிய எத்துறையைச் சேர்ந்த படைப்பாகவும் இருக்கலாம்.

**1975 ஜனவரி 1-ம் தேதி முதல் 1980 டிசம்பர் 31-ம் தேதிக்குள்** இந்தியாவில் பிரசுரிக்கப்பட்ட புத்தகமாக இருக்க வேண்டும்.

பிரசித்தி பெற்ற தார்மீக ஸ்தாபனங்கள், மடாலயங்களின் தலைவர்கள், பிரபல எழுத்தாளர்கள், நோபல் பரிசுப் பெற்றவர்கள், பல்கலைக் கழகங்களின் துணைவேந்தர்கள், சமூக நல பேராசிரியர்கள், தத்துவப் பேராசிரியர்கள் ஆகியோர், சமூக நலப்பணிகளில் ஈடுபட்ட சங்கங்கள், ஆராய்ச்சிக் கழகங்களின் தலைவர்கள் இப்பரிசுக்குரிய நூல்களைப் பரிந்துரை கூறலாம். பரிந்துரையுடன் தேர்ந்தெடுத்த நூல்களின் ஆறு பிரதிகளும் **1981 நவம்பர் 30-ம் தேதிக்குள்** தமிழ் புத்தகமானால், **பாரதீய வித்யா பவன், 38-39 கிழக்கு மாடவீதி, மயிலாப்பூர், சென்னை-600 004** என்ற விலாசத்துக்கும், ஹிந்தி புத்தகமானால் **பாரதீய வித்யா பவன், புதுதில்லி-110 001** என்ற விலாசத்துக்கும் அனுப்பி வைக்க வேண்டும்.

**ராஜாஜி இலக்கியப் பரிசு**

1982-ம் ஆண்டுக்கு மொழிகள் **ஆங்கிலம், ஸம்ஸ்கிருதம்**
1983-ம் ஆண்டுக்கு மொழிகள் **குஜராத்தி, மராத்தியும்**

# சுவர்ணமுகி

ஸ்ரீவேணுகோபாலன்

இந்த அரசர்கள் தங்கள் உறவினர்களைத் தங்களுடன் அண்டி இருக்க விடுவதில்லை. தூரமான இடங்களில் நல்ல பாதுகாப்பில் வைக்கிறார்கள்.

-பிரீட்டோ

**28**

அந்தக் குதிரை வீரனைப் பார்த்ததும் சுவர்ணமுகி பாதங்களை ஆழ ஊன்றினாள்.

வந்தவன் அர்ச்சன தேவன்!

வெகு தூரத்திலிருந்து வந்திருந்தான். உடம்பில் இங்குமங்கும் அழுக்குத் திட்டுகள். அணிந்த குப்பாயமும் பல இடங்களில் கிழிசல். எங்கேயோ சாகஸ காரியம் ஒன்று செய்து மீண்டவன் போல் தோன்றினான்.

அவள் உள்ளம் மெள்ளத் துளும்பியது. உடல் லேசாகப் பல இறுக்கங்கள் அவிழ்ந்தன. காதுகளில் இரண்டு குயில்கள் ஸ்வரங்கள் நெஞ்சைத் தொடும் சோக அழகில் விழுந்தது.

கண்களில் துன்ப இனிமை தளும்ப,

ஹ்ருதய! அலம் ஸம்கிததயா,

அயம் விபவ உபஸ்தித இதி!

(மனமே சந்தோஷம் வந்ததென்று மகிழ்ச்சியில் மூழ்காதே)

என்ற காளிதாசனின் மாளவிகா புலம்பிய வார்த்தைகள் மனத்தில் பின்னலிட்டன.

மாளவிகாவைப் போல் அவளும் குதூகலத்தை அடக்கப் பார்த்தாள்.

குதிரையை நிறுத்திய அர்ச்சனன் திரும்பி அவளைப் பார்த்ததும் புருவத்தை உயர்த்தினான். வாய் திறந்து ஒரு வார்த்தை அநேகமாக வெளிவந்து விட்டது. ஆனால் அருகில் இருக்கும் புதியவனைப் பார்த்ததும் அது நின்றுவிட்டது.

அப்போது ஏற்பட்ட தர்மசங்கடத்தில் அங்குமிங்குமாகப் பார்த்து, கடைசியில் கொத்தள துவாரத்தை நோக்கி, ''ஹேய்'' என்று குரல் கொடுத்தான்.

தலைப்பாகையோடு கோட்டை நாயகம் எட்டிப் பார்த்தார். உடனே புரிந்து கொண்டவர் போல் கதவைத்திறக்க ஓடினார்.

கிர்ரக் கிர்ரக் என்று உலோக ஒலியுடன் இரும்புச் சங்கிலிகள் ரோதையில் உருள பெரிய இறக்கை போன்று அகழிப் பாலம் கீழே படிந்து தூசியைக் கிளப்பியது.

பிரம்மாண்ட கோட்டைக் கதவும் திறக்கப்பட நாயகம் வெளியே வந்து அர்ச்சனனை உள்ளே அனுமதித்தார்.

ஸ்ரீரங்கனும் நாயகம் அருகில் போய், தனது முத்திரையைக் காட்டி இன்னார் என்று அறிமுகப்படுத்த,

''ஸ்வாமி! யாரையும் உள்ளே விட வேண்டாம் என்று கண்டிப்பான உத்தரவு. தாங்கள் யார் என்று உள்ளே செய்தி அனுப்புகிறேன். அனுமதி வந்ததும் உள்ளே விடுகிறேன். அதுவரை தயவு செய்து அந்தத் தண்ணீர்ப் பந்தலில் தங்குங்கள்'' என்று நாயகம் கூறினார்.

ஸ்ரீரங்கனும் இரு பெண்களும் அந்த ஓட்டு வீட்டில் தங்க வேண்டி வந்தது.

இரவு முழுவதும் செய்தி வரவில்லை.

ஸ்ரீரங்கனுக்குக் கவலையாக இருந்தது. தனது பெரியப்பா வேங்கடராஜா ஏன் உடனே தன்னை உள்ளே அழைக்கவில்லை என்று நினைத்தான்.

இதுவரை இதுபோன்று நிகழ்ந்ததில்லை. எத்தனையோ வித சங்கடமான நிலைகளில் கூட அரச குடும்ப முத்திரையைக் காட்டினால் அவன் உடனே மன்னர் பக்கம் அழைத்துச் செல்லப்பட்டான்.

இன்று ஏன் அதுபோல் நடக்கவில்லை?

ஒரு விடை தோன்றிற்று.

வேங்கடராஜாவின் பலம் வெகுவாக க்ஷீணித்து விட்டது. அதுவும் சந்திரகிரி அவர் கையை விட்டுப் போன பிறகு, அவரைச் சுற்றியிருந்த எவ்வளவோ பேர் அவரை விட்டு விலகிவிட்டார்கள்.

இப்போது மன்னர் அநேகமாக சகாயம் இழந்து நிற்கிறார்.

வந்தவாசி தளவாய் தாமர்ல வேங்கடப்பன் ஒருவர்தான் இன்னும் தளர்ந்து விடாமல் மன்னருக்கு உறுதுணையாக இருந்து வருகிறார்.

ஒருவேளை இவர்தான் ஸ்ரீரங்கனை உள்ளே விடாமல் தடுத்து நிற்கிறாரோ!

இருக்கலாம்.

மன்னர் பலவீனமாக இருக்கும் நிலையில் மன்னரின் உறவினர்கள் யாராவது அதைப் பயன்படுத்தி மன்னரைக் கொன்று பட்டத்தை அபகரிக்க முயலலாம்.

அப்படித்தான் இந்த விஜயநகர வம்சத்தில் நடந்து வருகிறது.

இந்தக் காரணத்தால் தளவாய் தாமர்ல ஸ்ரீரங்கனையே சந்தேகிக்கிறாரோ, என்னவோ?

ஒன்று அவருக்கு இதற்குள் புரிந்திருக்க வேண்டுமே!

வேங்கடராஜாவின் பக்கம் நின்று எதிரி திம்மராஜாவை ஒரு முக்கிய சண்டையில் முறியடித்தவன் ஸ்ரீரங்கன் ஆயிற்றே!

அதை வேங்கடராஜா மறந்திருக்க மாட்டாரே! தளவாய் தாமர்லவும் நன்றாக அறிந்திருப்பாரே!

அவ்விதம் தனது பெரியப்பாவுக்குப் பல விதத்தில் துணை நின்று கஷ்ட நேரங்களில் உதவி செய்த அவன், இன்று அந்தக் கோட்டைக்குள் அனுமதிக்கப்படாமல் இருந்தது வேதனையாக இல்லை?

ஒரு வேளை....

அவனது தாயாரின் செய்கை வேங்கடராஜாவின் காதுகளை எட்டியிருக்குமோ?

அதனால் அவனை அவர் சந்தேகிக்கிறாரோ?

''பெரியப்பா! சத்தியமாக எனக்கு ஆளும் ஆசை கிடையாது. தங்கள் சமூகத்தில் ஒரு ஊழியனாக இருக்கத்தான் விரும்புகிறேன். சந்தேகமிருந்தால் இதோ என் தலையை வெட்டியே தங்கள் பாதங்களில் காணிக்கையாக அளிக்கிறேன்'' என்று மனம் பொருமிச் சொல்ல வேண்டும் போல் இருந்தது.

கோட்டைக்கு வெளியே இருப்பது எவ்வளவு பெரிய அவமானம்?

ஸ்ரீரங்கனுக்கு அனுமதி மறுநாளும் கிடைக்கவில்லை.

அதற்கு மறுநாளும் கிடைக்கவில்லை.

அவன் பொறுமை இழந்து விடுவான் என்கிற நிலையில் மூன்றாம் நாள் கோட்டை நாயகம் வெளியே வந்து, அவனையும் அந்த இரு பெண்களையும் உள்ளே அழைத்துச் சென்றார்.

உள் மதிலைக் கடந்து, மேனக்கார வீதியை அடைந்து ஒரு பாதுகாப்புச் சுவர் படைத்த வெள்ளைக்கல் மாளிகைக்குள் கொண்டு விட்டு,

''சுவாமி, தாங்கள் இங்கே தங்குமாறு மன்னர் கூறியிருக்கிறார். எல்லா வசதிகளும் இங்கே ஏற்பாடு செய்யப்பட்டிருக்கின்றன. இந்த வீதியைத் தாண்டித் தயவு செய்து உட்புறம் வரவேண்டாம் என்று மன்னர் தங்களிடம் கேட்டுக் கொள்ளச் சொன்னார்'' என்று கூறினார் நாயகம்.

''ஐயா! நான் அவசரமாக மன்னரைப் பார்க்க வேண்டும். செய்தி வைத்திருக்கிறேன்.'' என்றான் ஸ்ரீரங்கன் பொறுமை இழந்து.

''அவசியம் அதை மன்னரிடம் தெரிவிக்கிறேன். விடை பெறுகிறேன், ஸ்வாமி!'' என்று கூறி நாயகம் பணிவாக வெளியே போனார்.

ஸ்ரீரங்கன் விரக்தியுடன் உள்ளே திரும்பினான்.



இரண்டு மூன்று நாட்கள்வரை சுவர்ணமுகி திக்பிரமையுடன் இருந்தாள்.

ஸ்ரீரங்கனுடன் வேலூர் வந்தது சரிதானா என்று தோன்றியது.

இனி என்ன நடக்கும் என்று மனம் அல்லாடியது.

அவளது மற்ற சில்லறைத் துயரங்களை மிஞ்சிக்கொண்டு ஒரு வேதனை மட்டும் மலை போல் அடிக்கடி எழுந்தது.

அர்ச்சுனன்!

அவர் ஏன் அவளுடன் பேசவில்லை?

அவளை ஏன் பார்க்க வரவில்லை?

கோட்டைக்கு வெளியே பார்த்தவர் ஏன் அவள் மீது எந்தச் சிரத்தையும் எடுக்காமல் போனார்?

ஒருவேளை வேற்றுருடன் இருப்பதைப் பார்த்து, அந்தச் சந்தர்ப்பம் சரியானதல்ல என்று போய்விட்டாரோ?

அந்த இடத்தில் அவளைத் தெரிந்ததாகக் காட்டிக் கொண்டால் அவளுக்கு ஏதாவது ஆபத்துக்கள் நேரிடலாம் என்று தோன்றியிருக்கும்.

இருக்கட்டும்.

நிச்சயம் அவள் கோட்டைக்குள்ளே வந்திருக்கும் செய்தி அவருக்குத்தெரிந்திருக்கும்.

அவர்தான் வேங்கடராஜாவுக்கு அந்தியந்தர் ஆயிற்றே!

விஷயம் அறிந்து அவர் ஏன் அவளைப் பார்க்க வரவில்லை?

நான்காம் நாள் பகலுக்கு மேல் ஒரு வித ஆரவாரம் அவள் காதுகளில் விழுந்தது.

அவளும் செல்வியும் சொக்கட்டான் ஆடிக் கொண்டிருந்த நேரம்.

உண்பதற்கு மட்டும் சமையலறைக்குப் போய் வந்து, மீதி எல்லா நேரங்களையும் அவர்கள் அந்தப் பின்கட்டு விஸ்தார அறையிலேயே கழித்தார்கள்.

அரவம் கேட்டதும் ஆட்டத்தை நிறுத்திச் சாளரம் வழியே வெளிப்புறம் நோக்க,

அங்கே தோன்றிய பரபரப்பான இயக்கங்கள் அவர்களுக்கு ஆச்சரியத்தை விளைவித்தன.

ஜனங்கள் கூட்டம் கூட்டமாகக் குறுக்கும் நெடுக்குமாக வீதியில் போனார்கள்.

அவர்களுடே காவல் வீரர்களும் சற்று அவசரமாக ஓடிக் கொண்டிருந்தார்கள்.

கைவண்டிகளில் யுத்த தளவாடங்கள் கோட்டை முகப்பை நோக்கி ஓடிக்கொண்டிருந்தன.

# ஒரு பிடி அவல்




● மின் வண்டிக்குரிய சீஸன் டிக்கட்டுகளை ஒருவருக்கொருவர் மாற்றிக் கொள்ளாமல் இருக்க டிக்கட்டில் கையெழுத்திட வேண்டும் என்று ரயில்வே நிர்வாகத்தினர் குறிப்பிட்டுள்ளனர். ஆனால் சிலர் கையெழுத்துக்குப் பதில் கைரேகையைப் பதித்துக் கொண்டு டிக்கட் பரிசோதகர்களை ஏமாற்றுகிறார்கள். காலையில் ஒருவர் மாலையில் ஒருவர் என சீஸன் டிக்கட்டுகளை மாற்றிக் கொண்டாலும் எதுவும் செய்ய இயலவில்லை என ரயில்வே அதிகாரி ஒருவர் மிகுந்த வருத்தத்துடன் குறிப்பிட்டார்.

● சில இதழ்களுக்கு முன்பு சென்னை அசோக் நகரில் ஒரு காலனி ''ராகவ ரெட்டி காலனி'' என ஜாதிப் பெயரோடு காணப்படுகிறது என: குறிப்பிட்டிருந்தோம். இப்போது 'ரெட்டி' என்ற சொல் மாநகராட்சியினரால் தார் பூசி அழிக்கப்பட்டு விட்டது.

● ''இன்றைய சேமிப்பு — நாளைய பாதுகாப்பு.''

''இந்தத் தொகை மாதம் முழுவதும் உழைத்ததற்காகக் கிடைத்தது. மாதம் முழுவதும் பயன்படுத்துவதற்காகத் திட்டமிட்டுச் செலவிடவும்.''

''கடன் பகையை வளர்க்கும்; சேமிப்பு மானத்தைக் காக்கும்''

போன்ற வாசகங்கள் அச்சிடப்பட்ட உறையில் அடிசன் கம்பெனியினர் ஊதியத்தை இட்டு வழங்குகின்றனர்.






● டந்த செப்டம்பர் 10ந் தேதி வடபழனி கோயிலில் மொத்தம் 120 திருமணங்கள் நடந்தன. திருமணத்துக்கு வந்தவர்கள் தங்களுக்கு அறிமுகமான மணமகன்—மணமகளைக் கண்டு பிடிப்பதற்குள் பெரும்பாடாகி விட்டது. ஒரே நாளில் இதுவரை இத்தனை அதிகமான எண்ணிக்கையில் திருமணங்கள் நடைபெறவில்லையாம். -மெய்ஜி




"தலைமுறை தலைமுறையாக மக்கள் பயன்படுத்திவரும் இந்திய மருந்துகளின் சக்தியே தனி...

அவற்றுள் தனிச்சிறப்பு வாய்ந்தது அமிர்தாஞ்சன்."

தலைமுறை தலைமுறையாக மக்கள் நம்பிக்கையோடு பயன்படுத்திவரும் அமிர்தாஞ்சன் பத்து மருந்துப்பொருள்கள் அடங்கியது. இவை பத்தும் இயற்கையின் அற்புதமான சக்திவாய்ந்த மருந்துகள். அதனால்தான் அமிர்தர்ஞ்சன் ஒரு சக்திமிக்க வலி நிவாரணியாக விளங்குகிறது.

இதன் பயனாக தலைவலி, ஜலதோஷம், உடல்வலி, சுளுக்கு இவை எல்லாவற்றுக்குமே அமிர்தாஞ்சன் விரைவாக நிச்சயமாக நிவாரணம் அளிக்கிறது. அமிர்தாஞ்சன் உபயோகிப்பதால் ஆபத்து இல்லை. இதனால் வேறு தீய விளைவுகள் எதுவும் ஏற்படாது.

**அமிர்தாஞ்சன் — 80 ஆண்டுகளுக்கும் மேலாகப் பல குடும்பங்களில் பயன் பட்டுவரும் நம்பகமான மருந்து.**

# அமிர்தாஞ்சன்

**தலைவலி. ஜலதோஷம். உடல்வலி. சுளுக்கு — அனைத்தையும் போக்க அருமையான மருந்து.**



சீக்கிரம் பணியாட்களை வினவ, விஷயம் தெரிய வந்தது.

நகரை முற்றுகையிட எதிரிகள் வந்திருந்ததால் கோட்டையைச் சுற்றிவர அவர்கள் நின்று கொண்டிருந்தார்கள்.

''வந்திருக்கிற எதிரிகள் யார்?'' என்று சுவர்ணமுகி வினவ, ''இம்மராஜா!'' என்று உத்தரம் கிடைத்தது.

பகல் முழுதும் எதிர்பார்ப்பிலும், அல்லோலகல்லோலத்திலும் செலவழிந்தது.

இரவுகூட அரவங்கள் தொடர்ந்தன. சுவர்ணமுகி ஒரே குழப்பமாக இருந்தாள். நாகரிக வாசத்தை அடைந்தது அவளுக்குத் தவறாகத் தோன்றியது.

காட்டுக்குள்ளேயே இருந்திருக்கவேண்டும்.

எந்தவிதக் கவலையும் இல்லாமல் இருந்திருக்கலாம்.

இரவு உணவு உண்ட பிறகு இருவரும் கவலையுடன் படுத்தார்கள்.

சுவர்ணமுகிக்குத் தூக்கம் வரவில்லை.

வெளிப்புறம் ஏதாவது சத்தம் கேட்டு அவளை உலுப்பிக் கொண்டே இருந்தது.

நடுநிசிக்குப் பிறகு மெள்ளக் கண்ணயரும்போது சின்ன அரவங்கள் கேட்டுக் கண்ணை விழித்தாள்.

சாளரத்துக்கு வெளியே ஏதோ நெளிந்து இறங்கிக் கொண்டிருந்தது.

திகைப்புடன் பார்த்தாள். அது ஒரு நூலேணி என்று தெரிந்து விட்டது.

ஏதாவது ஆபத்து வருகிறதா என்று மனசில் திகில் ஏற்பட்டது.

நூலேணி கட்டடத்தின் வெளிப்புறம் தான் இறக்கி யிருக்கிறது.

கட்டடம் நல்ல பாதுகாப்போடு மூடப்பட்டிருக்கிறது. அதனால் அவளுக்குக் கவலை இல்லை.

நூலேணி கீழே வரை போன பிறகு யாரோ இறங்கும் பிரயத்தனங்கள் தெரிந்தன. மெல்லிய நட்சத்திர ஒளி இப்போது வெளிப்புறத்தைச் சற்றுத் தெளிவாகக் காட்டியது.

உருவம் கீழே இறங்க, அவளுக்கு எதுவும் பிடிபடாமல் இருந்தது.

தரையில் காலை வைத்ததும் உருவம் நிமிர்ந்து உடலைச் சரிசெய்து நேராக அந்தச் சாளரத்தை நோக்கி வந்தது.

சுவர்ணமுகி கண்கொட்டாமல் பார்த்தாள்.

அருகில் வந்த அந்த ஆள், ''அம்மணி! அம்மணி?'' என்று உள் நோக்கிக் குரல் கொடுத்தான்.

இனியும் வெறுமனே இருத்தல் சரியில்லை என்று உணர்ந்த சுவர்ணமுகி, எழுந்து உட்கார்ந்து, ''யார்?'' என்றாள்.

''இந்தாருங்கள் ஓலை!'' என்று கையை வினயத்தோடு நீட்டியது உருவம்.

''யார் கொடுத்தார்கள்?''

''அர்ச்சனைத் தேவர்.''

சுவர்ணமுகி சட்டென்று எழுந்தாள்.

சாளரம் அருகே சென்று சுருளை வாங்கிக் கொண்டாள். உருவம் விடைபெற்று வணங்கிச் சென்றது. சுருளை வாங்கிய சுவர்ணமுகி சிறிது நேரம் எதுவும் புரியாமல் விக்கித்து நின்றாள்.

பிறகு கூடத்தின் மாடத்தில் விளக்கு எரிவதை அறிந்து அங்கே சென்று அதைப் படிக்க முயன்றாள்.

பக்குவப்படாத ஓலையில் எழுதியிருந்ததால் புது எழுத்துக்கள் உடனே தட்டுப்படவில்லை.

பிறகு கூர்ந்து கவனிக்க, வாசகங்கள் மெல்லப் புலப்படலாயின.

''சுவர்ணமுகி சமூகத்துக்கு, அர்ச்சனைத் தேவன் எழுதிய விண்ணப்பம்.

தங்களைப் பல இடங்களில் பல நாள்கள் தேடித் திரிந்து கடைசியில் விரக்தியாகி விடும் நிலையில் நல்லவேளை நீங்கள் கிடைத்தீர்கள்.

எனக்கு ஒரு ஆச்சரியம், எப்படி நீங்கள் ஸ்ரீரங்கனுடன் காணப்பட்டீர்கள் என்று.

இப்போது அவரைப் பற்றியும் அவரது தாயாரைப் பற்றியும் பல வதந்திகள் அடிபடுகின்றன.

அந்த நிலையில் தாங்கள் அவரிடம் வந்து சேர்ந்தது ஆச்சரியமாக உள்ளது.

சந்தர்ப்பம் சூழ்நிலையால் அவரை நீங்கள் பாதுகாப்புக்கு அணுக நேரிட்டிருக்கலாம்.

அப்படித்தான் என் மன அனுமானம் இருக்கிறது.

இருந்தாலும் ஒரு எச்சரிக்கை சொல்லுகிறேன். தயவு செய்து நீங்கள் யார் என்று அவரிடம் சொல்லிவிட வேண்டாம்.

உங்களைச் சந்திக்க முயன்று கொண்டிருக்கிறேன். யுத்த நேரம் வந்துவிட்டதால் இன்னும் முடியவில்லை.

இவண்
அர்ச்சனை தேவன்

முதலில் அதன் செய்தியை விட அந்தக் கடிதமே அவளைப் பரவசப்படுத்தியது.

அந்த நேர்த்தியான எழுத்துக்களை ஆவல் கனியப் பார்த்தாள்.

ஒரு கணம் ஓலையே அவளுக்குத் தூது வந்திருப்பது போல் தோன்றியது.

கையில் அதை ஒரு பூப் போல் கசங்காமல் வைத்துக் கொண்டு பரவசமாக அதை அணைக்கப்போகும் வேளையில்,

அரவம் ஒன்று கேட்டது.

திரும்பினாள். பார்வை திகைப்புடன் நின்றது.

(தொடரும்)

# அன்பளிப்பு

## சில்பி யின் தெய்வச் சித்திரங்கள் 6

புனிதத் திருத்தலங்களில் அருள்பாலிக்கும் தெய்வத் திரு உருவங்கள்.* காஞ்சிப் பெரியவர் ஆசிபெற்ற 'சில்பி' வரைந்துள்ள ஓவியங்கள். பல வண்ணங்களில் ஆர்ட் காகிதத்தில் அச்சிடப்பட்டவை. பூஜை அறையில் நாள்தோறும் போற்றி வணங்குவதற்கு உகந்தவை.



**புதிய டெபாஸிட் செய்பவர்களுக்கும் அறிமுகம் செய்பவர்களுக்கும் ஸ்ரீராம் வழங்கும் அன்பளிப்பு.**

நீங்கள் டெபாஸிட் செய்யும் ஒவ்வொரு ரூ. 5000க்கும், இந்த அன்பளிப்பு உண்டு. (அறிமுகம் செய்வோர், ஸ்ரீராம் டிரான்ஸ்போர்ட் ஃபைனான்ஸ் கம்பெனி லிட்., ஸ்ரீராம் சிட்ஸ், ஸ்ரீராம் ஃபைனான்ஸ், ஸ்ரீராம் இன்வெஸ்ட்மெண்ட்ஸ் ஏதேனும் ஒன்றில் அங்கத்தினராக இருக்கவேண்டும்.) நீங்கள் விரும்பினால், உங்களுக்கு உரிய அன்பளிப்பை இந்தியாவில் எந்த விலாசத்திற்கும், எங்கள் செலவில் பதிவு தபாலில் அனுப்பி வைக்கிறோம். (வெளிநாடுகளுக்கு விமான தபால் கட்டணம் தனி)

1. கவர்ச்சி மிகு வட்டி:

| வட்டி விகிதம் / டெபாஸிட் காலம் | மாதாமாதம் வட்டி பெற | 6 மாதங்களுக்கு ஒரு முறை வட்டி பெற | மறு முதலீட்டுத் திட்டத்தில் மொத்தமாக வட்டி பெற |
|---|---|---|---|
| 1 ஆண்டு | 14.0% | 15.0% | 15.5% |
| 2 ஆண்டுகள் | 14.5% | 16.0% | 17.5% |
| 3 ஆண்டுகள் | 15.0% | 17.0% | 20.0% |

2. மறு முதலீட்டுத் திட்டம்

இத்திட்டத்தில் (Re-investment plan) உங்களது ரூ. 3,125, மூன்றே ஆண்டுகளில் ரூ. 5,000 ஆக வளர்கிறது. இதில் டெபாஸிட் செய்வோர்க்கும் இவ்வன்பளிப்பு உண்டு. உங்களை அறிமுகம் செய்பவரும் இந்த அன்பளிப்புப் பெறலாம்.

3. நம்பிக்கை—நாணயம்—அநுபவம்—உங்கள் டெபாஸிட்டிற்கு உத்திரவாதம்

ஸ்ரீராம் இன்வெஸ்ட்மெண்ட்ஸ் நிறுவனம் பதிவு செய்யப் பெற்ற பார்ட்னர்ஷிப் (Registered Partnership) நிறுவனம். இந்த நிறுவனம் மோட்டார் வாகனங்களைத் தவணை முறையில் வாங்குபவர்களுக்குக் கடன் உதவி செய்கிறது. இத்துறையில் பதினைந்து வருட அனுபவமும் திறமையும் மிக்கவர்களால் நிர்வகிக்கப்படுகிறது.

ADWAVE/SI/1724

* 1: ஸ்ரீ குருவாயூரப்பன். 2. ஸ்ரீ முருகன், திருப்பரங்குன்றம். 3. ஸ்ரீ பங்காரு காமாட்சி, தஞ்சாவூர். 4. ஸ்ரீராமர், பத்ராசலம். 5. ஸ்ரீ கோமதி அம்மன், சங்கரன்கோவில். 6. ஸ்ரீ அபிராமி அம்மன், திருக்கடையூர். (அளவு: 23 செ.மீ x 19 செ.மீ.)




## ஸ்ரீராம் இன்வெஸ்ட்மெண்ட்ஸ்

தலைமை அலுவலகம்: 123, அங்கப்ப நாயக்கன் தெரு,
சென்னை 600 001. போன்: 28545/37890/21425.

கிளை அலுவலகம்: 54, வடக்கு உஸ்மான் சாலை, தி. நகர்,
சென்னை 600 017. போன்: 441074 (செவ்வாய் விடுமுறை)

பெங்களூர் கிளை: செல்லர் ஃபிளோர், பிரவுனம்மா டவர்,
70/1, மிஷன் ரோடு,
பெங்களூர் 560 027. போன்: 27006.

# எழிலுக்கோர்
# எடுத்துக்காட்டு
# கோ-ஆப்டெக்ஸ்



பருத்தி—பட்டு—
பாலியஸ்டரில் உருவானவை:

- பூவின் மென்மையும்
- புத்தொளிப் பொன்மையும்
- பார்வையைக் கவரும் பற்பல வண்ணங்களில்
- ஒயில்மிகு மங்கையர் அணிந்திட உகந்த
- ஒப்பற்ற அழகுச் சித்திரச் சேலைகள்
- மழலைகள் விரும்பும் மணிச்சுடர் சட்டைத் துணிகள்
- வேட்டிகள், லுங்கிகள்
- படுக்கை விரிப்புகள்
- அலங்காரத் துணி வகைகள்
- ஆடை அணிகலன்கள்.

அனைவரும் அணிந்திடலாம்
அழகுடன் விளங்கிடலாம்.
நீடித்து உழைப்பது நிறையழகு கொடுப்பது
கோ-ஆப் டெக்ஸ் கைத்தறி!

**தீபாவளி சிறப்புத் தள்ளுபடி**
**1.10.81 முதல்**






**கோ-ஆப்டெக்ஸ்**
கைத்தறி

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone : 431543) Editor : K. Rajendran

SUPER
RIN
DETERGENT CAKE
RIN

